ஸ்ரீ:

வேதவல்லித்தாயார் வேதநாராயணன் திருவடிகளே சரணம்.

இராஜகோபாலன் திருவடிகளே சரணம்.



குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# மன்னார்கோவில் மாண்பு.




அம்பாசமுத்திரம்

டாக்டர். தோ. ஆழ்வார் அய்யங்கார் அவர்களால்

ஆராய்ச்சிசெய்து எழுதி வெளியிடப்பட்டது.

1958.

ஸ்ரீ:

வேதவல்லித்தாயார் வேதநாராயணன் திருவடிகளே சரணம்.

இராஜகோபாலன் திருவடிகளே சரணம்.



குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# மன்னார்கோவில் மாண்பு.

அம்பாசமுத்திரம்

டாக்டர். தோ. ஆழ்வார் அய்யங்கார் அவர்களால்

ஆராய்ச்சிசெய்து எழுதி வெளியிடப்பட்டது.

1958.

ஸ்ரீம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மன்னார் கோவில் மாண்பு.

## (ஸ்தல புராணம்)

## வேத நாராயணப் பிரதிஷ்டை.

---

அச்சம் நோயொடு அல்லல் பல்பிறப்பு அவாய மூப்பு இவை,
வைத்த சிந்தை வைத்த ஆக்கை மாற்றி வானில் ஏற்றுவான்,
அச்சுதன் அநந்த கீர்த்தி ஆதி அந்தம் இல்லவன்,
நச்சு நாகணைக் கிடந்த நாதன்: வேத கீதனே.

ஸ்ரீய:பதியாய், அவாப்த சமஸ்த காமனாய், சகல கல்யாண குணாகரனாய், ஸ்ரீ வைகுண்ட நிகேதனனாய், ஸ்ரீமத் அநந்தமுக நித்ய சூரிகளால் சூழப்பட்ட ஸர்வேஸ்வரன், "நலமந்தமில்லதோர் நாட்டில்" "கொடியணி நெடுமதிள் கோபுரங்" களையுடைத்தான திருப்படை வீட்டிலே, மணிமாட மாளிகைகளாலே சூழப்பட்ட, "செம்பொன் செய்கோயிலிலே" "திரு" மாமணி மண்டபத்திலே" "கோப்புடைய சீரிய சிங்காதனத்திலே", "சுழிபட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளம்" என்று சொல்லுகிறபடி, பேரொளி வடிவாய், சின்னமயமாய், விளங்குகிற திருமுடி முதல் திருவடிவரை உடையசிறந்த பீதாம்பராபரண அலங்காரனாய், சிறந்த பஞ்சாயுதங்களோடு பிரகாசிப்பவனாய், எல்லோரும் அதிசயிக்கத்தக்க, எழிலோடும், இளமையோடும், வலிமையோடும், வசீகரிக்கும் வண்ணத்தோடும், மிகுந்த கருணைக்கு உறைவிடமாய், அருள் பொழியும் ஆனந்த வடிவுடையவனாய், இவ்வடிவழகு மிகுந்து பிரகாசிக்கும்படி, ஸ்ரீ, பூமி, நீளைகளோடே, "ஏழுலகும் தனிக்கோல்செல்ல" வீற்றிருந்து, "அயர்வறு மமரர்கள்" என்கிற அநந்த, கருட, விஷ்வக் சேனர்களான நித்ய சூரிகளையும், முக்தரையும்,

"அந்தமில் பேரின்பத்தடியர்" என்னும்படி ஆனந்திப்பித்துக்கொண்டு, எழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந் நாராயணனிடத்தில் தேவர்கள் ஒரு சமயம் பிருகு மகரிஷி பத்தினி கியாதி என்பாள் கொடுமையே உருவான அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுத்தாள், அவர்கள் வலிமை மிகுந்தவர்களாகிவிட்டார்கள். ஆகவே எங்களால் அவர்கள் கொடுமையைத் தாங்கமுடியவில்லை. எனவே, "இரங்கு நீ எமக்கு எந்தை பிரானே" என்று தேவர்கள் விண்ணப்பித்துக்கொண்டனர்.

துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலன சங்கல்பனான ஸ்ரீமந் நாராயணன் தேவர்களின் பரம விரோதிகளான கொடிய அசுரர்கட்கு அடைக்கலம் தந்த பிருகு பத்தினியின்மீது அடங்காச் சீற்றம்கொண்டு, "அங்கு அவ் வானவர்க்கு ஆகுலம் தீர" அவளைச் சக்கராயுதத்தால் சேதித்தான்.

அது கண்ட பிருகு மகரிஷி, மனைவியைப் பிரிந்த, பிரிவாற்றாமையினால், மிகுந்த வருத்தமுற்று பரிதபிக்கலாயினார். அவ்வளவிலே சினம் மிகுந்து, "பெண்ணென்று பாராமலும், மகரிஷியின் பத்தினி என்று ஓராமலும், மஹா பாபத்தை இந்த விஷ்ணுவானவன் செய்துவிட்டானே, இதற்கு தக்க தண்டனையை அவனும் அனுபவித்தே ஆகவேண்டும்" என்று, ஆராயாமல், "நான் மனைவியை இழந்து பரிதபிப்பதுபோல், பூவுலகில் இவ்விஷ்ணுவும், மனிதனாகப் பிறந்து, மனைவியை இழந்து பரிதபிக்கக் கடவன்" என்று சாபம் கொடுத்தார்.

சற்று நேரம் கழித்து, கோபம் அடங்கியபின், மகரிஷியின் மனத்திலே சாந்தம் நிலவியது; அவர் கடந்த காரியத்தைப்பற்றி ஆலோசிக்கலானார். "நாம் என்ன காரியம் செய்தோம்! ஸௌரூப குணவிபவங்களாலே மேற்பட்ட லோகாதிபதிகளுக்குள்ளே, சிரேஷ்டர்களான பிரம்மாதிகளுக்கும் சிரேஷ்டனும், தன்னைக்காட்டிலும்

வேறு சிரேஷ்டன் இல்லாதவனும், பரமாத்மாவுமாய், சேதனு சேதனங்களுக்கெல்லாம் தானே ஆதாரமாய், தனக்கு வேறொன்றும் ஆதாரமில்லாதபடியினுலே, தன்னிலேயேதான் இருப்பவனுய், படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய செயல் களுக்குத் தானே கர்த்தாவாய், தேவமானுஷ்யாதிகளை அடையும், இருத்தல், பிறத்தல், திரிதல், குறைதல், வளர்தல், கெடுதல் என்கிற விவகாரங்களை விட்டிருக்கையாலே எக்காலமும், அளவிடற்கரிய, ஞான, சக்தி, ஐஸ்வரிய, வீரிய, தேஜோ பல ஷட்குண மயமான ஸொரூபத்தோடே இருக்கிறவனென்று மாத்திரமே சொல்லக்கூடியவனுய், சேதனு சேதனங்கள் எல்லாவற்றிலும், மேலும், கீழும், பக்கமும், உள்ளும், புறமும் தான் வசித்துக்கொண்டு சகல சேதனு சேதனங்களும் தன்னிடத்தில் வசிக்கத்தக்கதாகிய சர்வ லோக வியாபகமான சொரூபமுடையவனுய். ஒன்றிலும் ஒட்டாமல் எல்லாம் தன்னுலே விளங்கும்படி பிரகாசிக்கிறவனுகையாலே ஸ்ரீ வாசுதேவனென்கிற திருநாமத்தினுலே வேதவித்துக்கள் கொண்டாடும்படியானவனுய், ஸொருபத்திலும் குணத்திலும், பெருமையுடையவனுகையாலே, பிரம்மமென்றும், பரமனென்றும் சொல்லப்பட்டு, நித்தியனும், பிறப்பில்லாதவனும், அழிவில்லாதவனும், எப்போதும் ஒரே விதமான ஸொரூபனுமாய், துக்கம், அஞ்ஞானம் முதலான ஹேயகுணங்கள் இல்லாதவனுகையாலே, நிர்மலனுய், தோன்றுவதும், தோன்ருததுமான சகல லோகங்களையும் சரீரமாகக்கொண்டவனுய், புருஷரூபமாயும், காலரூபமாயும் இருக்கினும், ஆதிகாரணமான, பிரகிருதிக்கும், புருஷனுக்கும், வியக்தமான பிரபஞ்சத்திற்கும், காலத்திற்கும் வேருய், மேற்பட்டதாய் யிருக்கிற அந்த ஸ்ரீமந் நாருயணன் மஹோபநிஷத்தில் பரப்பிரும்மமென்று சொல்லப்பட்டவனுயிற்றே! அந்த மஹாபுருஷனை சிந்தனையின்றி சபித்துவிட்டோமே! "அம்மானுழிப்பிருன் அவனெவ்விடத்தான் யானுர்" என்றபடி அவன் புகழின் சிகரம், யான் அவன் சேவடிகளில் தொண்டுசெய்யும் சிறுவன். என் சாபம்

அவனை அண்டுமா? எம்பெருமான் என்னதான் கேடு செய்துவிட்டார்? மஹாபாபிகளான அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுத்த என் மனைவியைக் கொன்றார். இது ஓர் அநியாயமான காரியம் அல்லவே தர்மஸம்ஸ்தாபனார்த்தமாகச்செய்த ஓர் காரியத்தை என் சிற்றறிவால் உணரமாட்டாமல் தர்மத்திற்கு உறைவிடத்தைச் சபித்தேனே! இச்சாபம் அவ்வமலனைச் சென்றடையுமா?

நியாயா நியாயம் தெரியாவிட்டாலும், ஜகத்காரணன் செய்வது சரியாகத்தான் இருக்கவேண்டும் என்றுவது உணரவேண்டாமா? என் சாபம் அந்த நிர்மலனைச் சென்று பற்றாது. வினைப்பயனை அனுபவிக்கும் ஸ்ருஷ்டிகளை மட்டுமே அடையும். தானே வினையும் பயனுமாய் இருக்கிற அந்த ஆதிமுதலை நிச்சயமாகச் சென்றடையாது. ஆகவே என் வாக்கு பொய்யாகும். பொய் புகன்றதற்குப் பலன் நரகமே, அல்லது அந்த வினைப்பயனை நானே அனுபவிக்க வேண்டும். இதற்கு என்ன செய்யலாம்'' என்று யோசனைசெய்து அந்த பரமபதநானைச் சரணடைவது அன்றி வேறு புகலில்லை என்று அவர் தீர்மானித்தார்.

எனவே

**இளைப்பினை இயக்கம்நீக்கி இருந்துமுன் இமையைக்கூட்டி**
**அளப்பில் ஐம்புலன் அடக்கி அன்பு அவர்கண்ணே வைத்து**
**துளக்கம் இல்சிந்தைசெய்து, தோன்றலும் சுடர்விட்டாங்கே**
**விளக்கினை விதியின் காண்பார் மெய்ம்மையைக் காண்கிற்**
**பாரே!**

என்றபடி புலனடக்கி யோகாப்பியாசத்தால் பகவானை நினைத்து தபசு செய்தார். அவர் பக்தி மேலிட்டுச் செய்த தபசை மெச்சி ஸர்வேஸ்வரன் இரங்கி, மகிழ்வுற்று, பிரத்யக்ஷமாயினார். அப்பொழுது பிருகு மகரிஷி,

**அவிசொரிந் தாற்றும் வேள்வி அதனுடைப் பொருள்கள் யாவும்**
**கவின்பெறு மண்ணும், காலும், ககனமும், தீயும், நீரும்**
**சவியுறு வேதம் நான்கும் சரங்களு மசரம் யாவும்**
**புவியையு மாக்கிக் காக்கும், புராதன! போற்றி! போற்றி!**

என்று துதித்தார்.

அவ்வமயம் தன்னை நோக்கித் தவம் செய்தமைக்கு ஸர்வேஸ்வரன் காரணம் வினவ, பிருகு மகரிஷி, ''கருணா ஸாகரா! அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுத்த என் மனைவியை தேவரீர் சிரச்சேதம் செய்தீர். மனைவியை இழந்த நான் வருத்தம் மேலிட்டு அக்காரியம் செய்த தேவரீரிடத்தில் சினம் மிகுந்து, கோபாவேசத்தில் தேவரீரை மனுஷ்யராய்ப் பிறந்து, மனைவியை இழந்து, பல காலம் வருந்தக்கடவீர்'' என்று சபித்துவிட்டேன். அச்சாபம் ஸர்வேஸ்வரனாகிய தேவரீரை நிச்சயமாக அடையாது. ஆகவே என் சாபம் ஓர் சூனியப்பேய் போல் மீண்டு வந்து என்னையே துன்புறுத்தும். இதற்கு என்செய்வேன்.

**'' தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லும் சினம் ''**

என்ற முதுமொழிப்படி சினத்தால் அழிந்தவர்களில் யானும் ஒருவனாவேன். யான் ஒரு முனிவனாக இருந்தும் வெகுளியை வீட்டாத காரணத்தால் தபோ பலத்தை வீணாக்கியதோடல்லாமல் கேட்டையும் விளைவித்துக் கொண்டேன். ஆகவே ''தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை'' என்று சாஷ்டாங்கமாக சேவித்து விண்ணப்பித்துக்கொண்டார்.

அப்பொழுது பரமதயாளுவான பகவான் திருவுள்ளமுவந்து, ''நான் ஸ்வேச்சையாக தர்மஸம்ஸ்தாபனார்த்தம் அவதரிக்கப்போகிறேன். மகரிஷிகள் வேறு யான்வேறு அல்ல. ஆகவே அவர்களின் வாக்குகள் பொய்க்கக்கூடாது. என் அவதாரங்களில் அவர்களின்

வாக்குகளை வாய்மையாக்குகிறேன். உம்வாக்கும் மெய்யாகும் நீவிர் ஓர் பிரும்மரிஷியாகையால். நீவிர் அஞ்சற்க! இராவணாதியர்களை ஒழிப்பதற்கு தசரதனுக்குப் புதல்வனாக அவதரித்து, சீதாப்பிராட்டியை விட்டுச் சிலகாலம் பிரிந்திருந்து உம் சாபத்தை உண்மையாக்குகிறேன். நீரிதற்கு அஞ்சவேண்டாம்'' என்று அனுக்கிரகித்து அந்தர்தானமானார்.

இதைக்கேட்ட பிருகு மகரிஷி, பகவானின் பக்தர்களுக்கு இரங்கும் தன்மையை வியந்து, ஆனந்தம் கொண்டார். பிறகு என்ன செய்யவேண்டுமென்று ஆலோசித்து, முக்காலமும் உணர்ந்த முனிவராகையால், இராமாவதாரத்தில், தண்டகாரண்யத்தில் சீதையைப் பிரிந்த இராமன், இராவணவதத்திற்குப்பின், சீதாபிராட்டியோடு இலங்கையிலிருந்து திரும்பி எழுந்தருளும் போது சேவிக்கவேண்டுமென்று, அகஸ்தியர் எழுந்தருளியிருக்கும் மருள் நீக்கும் மலையாகிய மலயாசலத்தின் அடிவாரத்தில் எழுந்தருளி இருந்தார். அவ்வாறே, ஸ்ரீ ராமன் பங்கயச்செல்வியை மீட்டிக்கொண்டு, புட்பக விமானத்தில் இலங்கையிலிருந்து திரும்பும் பொழுது, விமானத்திலிருந்தவாறே, அகஸ்தியர் பிருகு முதலிய மகரிஷிகளுக்கு சேவை சாதித்தார்.

சாபம் நீங்கிய பிருகு மகரிஷி, அந்தவேதநாதனாகிய வேதநாராயணனை மலயாசலத்தின் அடிவாரத்தில் எழுந்தருளுவித்து, பிருகு தீர்த்தத்தையும் உண்டாக்கி, தன் கொள்ளுப்பேரனை மார்கண்டேயருடன், வேதநாராயணன் முன்னிலையில் வேதங்களை உலகுக்கு எடுத்துப் போதித்துக்கொண்டு, வேதத்திற் கூறப்பட்ட பரப்பிரும்மமாகிய ஸர்வேஸ்வரன் வேதநாராயணன் என்று உலகறியச்செய்து, பிருகு தீர்த்தத்தை ஸ்வீகரித்தவர்களுக்கு பரமஞானம் உண்டாகும்படியும், வேதவிமானத்தை சேவித்தவர்கள் க்ருதார்த்தர்கள் ஆகவும்

அவனுடைய கிருபையால் ஏற்படுத்தி, அவ்விடத்தை வேதநாராயண க்ஷேத்திரம் அல்லது வேதபுரியாக்கி, பிரும்ம வித்துக்கள் நிறைந்த பிரும்மதேசமாகச்செய்து, உலகை வாழ்வித்தருளினர்.

இங்கு ஸ்ரீ வேத நாராயணனை பிருகு, மார்க்கண்டேயர் என்ற இரு சித்தர்களும் பிரதிஷ்டை செய்தமையால் இந்த ஸ்தலத்திற்கு ஸைத்த ஸ்தலம் என்றுபெயர். ஸைத்த க்ஷேத்திரத்தைச் சுற்றி அரையோஜனை தூரமுள்ள பிரதேசம், பாபத்தைப் போக்கக்கூடியதாய், இறப்போர்க்கு மோக்ஷத்தைக் கொடுப்பதுமாயிருக்கும்.

## குலசேகராழ்வார் வேதநாராயணனைச் சரணடைதல்.

இராமாவதாரம், கிருஷ்ணவதாரம் முதலிய அவதாரங்கள் எடுத்தும், பிருகு, மார்க்கண்டேயர் போன்ற பிரும்ம ரிஷிகளைப்பிறப்பித்து, உலகுக்குப் போதித்தும், உலகம் சீர்திருந்தாமையினலே அனேக ஸம்ஸாரிகள் எல்லா பாபங்களுக்கும் ஏதுவாகிய தன்ஸ்வாதந்தர்ய ரூபமான ஆத்மாபஹாரத்தைப்பண்ணி "அவரவர் விதிவழி அடைய" நிற்கிறபடியைக்கண்டு, சீட்டுக்கு இசையாதாரைச் சேனையைத் திரட்டி வெல்லும் ராஜாக்களைப்போலே, ஸர்வேஸ்வரன் ராம கிருஷ்ணவதாரங்களால் சாஸ்திரீய மரியாதைகளை தானே அனுஷ்டித்து படாத பாடுபட்டுத் திருத்தப் பார்த்தும், அசுரர்களைப்போல், தன்னைவந்து கிட்டாதே எதிரிட்டு அதமமான கதிகளில் விழுகிற படியைப் பார்த்து, "விஜயாதீயரான நமக்கு இது ஸாத்யமன்று; இணக்குப் பார்வையிட்டு மிருகம் பிடிப்பாரைப்போலே மனுஷ்ய ஸஜாதீயரான ஆழ்வார்களைக்கொண்டே கார்யம் கொள்ளவேணும்" என்று அறுதியிட்டு ஸ்ரீவத்ஸ, கௌஸ்துப, வைஜயந்தி, வநமாலைகளையும்,

ஸ்ரீ பூமி, நீளைகளையும், ஸ்ரீ பஞ்சாயுத ஆழ்வார்களையும், அநந்த, கருட, விஷ்வக்ஸேன ப்ரப்ருதிகளையும் பார்த்து நீங்கள்போய் லீலா விபூதியில் நாநாவர்ணங்களிலும் அவதரித்து எல்லா ஆத்மாக்களையும் உத்தரிப்பியுங்கள்'' என்று நியமித்தருள, அவர்களும், தாம்ரபர்ணி, காவேரி முதலான நதிகளின் ஸமீபங்களான தமிழ்த் தேசங்களில் தாழ்ந்தாரை உயர்த்துவதற்காக, நாநாவர்ணங்களில் வந்து அவதரிக்கலாயினர்.

அவ்வாறு அவதரித்த ஆழ்வார்களில் குலசேகரரும் ஒருவர். அவர் பரசுராம திவ்யதேசமாகிய கேரள ராஜ்யத்திலே திருவஞ்சிக்களம் என்ற நகரிலே, ஆன் பொருனை நதிக்கரையிலே, த்ருடவிரதர் என்னும் அரசர் தமக்குக் குழந்தை இல்லாமையாலே பகவானைப் பிரார்த்திக்க, அதன் பயனாக கலியுகம் பிறந்த 28ம் வருஷமான பராபவ வருஷம், மாசி மாதம் புனர்பூச நக்ஷத்திரத்தில், சுக்கில பக்ஷத்துத் துவாதசியும், வியாழக்கிழமையும் கூடிய சுபதினத்தில், பட்டத்து ராணியிடத்திலே கௌஸ்துபாம்சராய் அவதரித்தார். அவரது தந்தை உரிய காலத்தில் நாமகரணம் செய்யத் தொடங்கி, இம்மகன் தம் குலத்துக்கு சிரோபூஷணம்போல் விளங்கி சிறப்போடு யாவராலும் கொண்டாடத்தக்கவன் என்று கொண்டு அவருக்கு, குலசேகரன் எனப்பெயரிட்டார்.

நாளாக ஆக, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக. சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல் வளர்ந்து, சௌளமும், உபநயனமும், தக்க பருவங்களில் தந்தையால் செய்விக்கப்பெற்று நல்லாசிரியரைத் துணைக்கொண்டு, நான்கு வேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், பதினெண் புராணங்களையும், அறுபத்து நாலு கலைகளையும் இளவயதிலேயே ஐயம்திரிபு அறக் கற்றுத்தேர்ந்து, வல்லவனான மைந்தனைக்கண்டு உள மகிழ்ச்சி பொங்கிய அரசன், மகனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டினான்.

குலசேகரன் அரசமுறைக்கேற்ப பகை வெல்ல லுற்று நால்வகைச்சேனையொடு சென்று, சோழ, பாண்டிய, கொங்கு நாடுகளை வென்று சேர நாட்டோடு மற்ற நாடுகளுக்கும் தலைமை தாங்கி, "கொல்லி காவலன், கூடல் நாயகன், கோழிக் கோன், குலசேகரன்" என்றும் "கொங்கர் கோன் குலசேகரன்" என்றும் பிருதுகளைப்பெற்று மீண்டு வந்தனன்.

பின்னர் அரச முறைப்படி த்ருடவிருதர் தன் குமாரனுக்கு பட்டாபிஷேகம் செய்து தான் தவம் செய்ய வனம் சென்றூர்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்ருது வருந்திய தநயன் மந்திரிகள் முதலானோர் தேற்றத்தேறி, சிறியதைப்பெரியது நலியாதபடி இராம இராச்சியம் என்ன எதிரின்றி அரசாண்டு, ஓர் பெண்மணியை மணந்து, நீளாதேவியின் அம்சமான, இளையென்னும் ஒருபுத்திரியையும், த்ருட விருதன் என்னும் ஓர் குமாரனையும், பெற்று, கவலையற்றிருக்கும் நாளில், "முழு முதற் கடவுள் யாவர்" என்று பரதத்வ விசாரம் பண்ணத்தொடங்கி பலபண்டிதர்களுடனே, ச்ருதி, ஸ்மிருதி, இதிகாஸ புராணம் முதலிய சகல சாஸ்த் திரங்களையும், பரிசோதித்துப்பார்த்து வர, அவ்வரசனை ஆட்கொள்ளக்கருதிய கருணாநிதியான, "கண்ணனென்னும் கருந்தெய்வம்; தன்நிர் ஹேதுக கடாக்ஷத்தினலே, "ஸ்ரீமந்நாராயணனே பரப் பிரும்மம்" என்ற சத்தியசித்தாந்தம் அவனது ஞானக் கண்ணுக்குத்தெள்ளிதிற் புலப்பட சேனை முதலிகள் மூலமாக அருளினன்.

இப்படி எம்பெருமானைப் பரம்பொருளாக அறிந்து அப்பிரானது அநந்த கல்யாண குணங்

களாகிய ஸாகரத்தில் மூழ்கி, நெஞ்சுருகி, ஈடுபட்ட குலசேகரன், மாயோனின், விபவாவதாரங்களிலே, ஸ்ரீ ராமாவதார கிருஷ்ண வதாரங்களிடத்திலும், அர்ச்சா வதாரத்தில், திருவரங்கம், திருவேங்கடம் முதலிய திவ்ய தேசத்து எம்பெருமான் களிடத்திலும், "சோராத காதல் பெருஞ்சுழிப்பால்" ஈடுபட்டு ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே பொழுது போக்காகவும், ஸ்ரீவைஷ்ணவ சம்பந்தத்தையே, ஓர் சம்பத்தாகவும் எண்ணி, தமது திருமாளிகைத் திருவாராதனத்தில் எழுந்தருளியுள்ள, ஸ்ரீ ராமபிரானுக்கும், ஸ்ரீ ராஜகோபாலனுக்கும் நித்திய நைமித்திக உத்ஸவங்களை குறைவறச்செய்துகொண்டு இருந்தார்.

இவர் ஒருநாள் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் நடந்து வருகையில், ஆரண்ய காண்டத்தில், "இராவணன் தங்கையான, சூர்ப்பனகை மூக்கு அறுப்புண்டு தனக்குத் துணையாக இராவணனால் நியமிக்கப்பட்டு ஜநஸ்த்தானத்திலிருந்து, கரதூஷணதியரிடத்திற்போய் முறையிட்டதையறிந்து, அவர்கள் அதியுக்ரமாக எண்ணிறந்த சேனைகளைத் திரட்டிக்கொண்டு படையெடுத்து வந்த சமயத்தில் பெருமான் பிராட்டிக்குக் காவலாயிருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டு தமக்கு ஒருவருந்துணையின்றித் தாம் தனியே, அவ்வரக்கர்கள் அனைவரோடும் போர்க்குச் சென்று நின்றார். என்று பௌராணிகர் சொல்லக் கேட்டவுடனே ஸ்ரீ ராமசரித்திரத்தில் தமக்கு உள்ள மிக்கபிரீதி விசேஷத்தால், வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அச்சரித்திரத்தை அன்றுதான் நடக்கின்றதாக நினைத்து, இப்படிப்பட்ட சங்கட காலத்தில் எம்மால் இயன்ற உதவியைச்செய்யாது விடுவது சிறிதும் தக்கதன்று" என்று துணிந்து, தமது சேனைகளை எல்லாம் போர்க்குச் சித்தமாய் முன்செல்லும்படி பணித்து தாமும் ஜநஸ்தானத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்

கிட்டு நிற்கையில், அதிநிபுணரான ஆசிரியர், "இராம பிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பிரபல யுத்தம் செய்து சத்துருக்கள் அனைவரையும் வென்று, தமது ஆசிரமத்துக்கு மீண்டுவர, அவரைச் சீதாதேவீ களிப் புடன் அணைத்து, அவரது இளைப்பைத் தணித்தாள்" என்ற செய்தியை எடுத்துக்கூற, அது கேட்ட குலசே கரன், ஆனந்தமடைந்து சேனையைத் திருப்பிக்கொண்டு, தாமும் பிரயாணத்தை நிறுத்தினார்.

அது முதல் இராமாயணம் கூறுபவர் இராம னுடைய விஜயப்பிரஸ்தாபங்களை மட்டுமே வளர்த்திக் கூறியும், இராமனுக்கு துன்பம் நேரிடும் இடங்களைச் சுருக்கியும் உரைத்து வந்தார். இப்படியிருக்கையில், ஒரு நாள் அந்தக் குருவர இயலாமல் வேறிடம் செல்ல வேண்டியதிருந்ததால் தன் குமாரரை இராமாயண காலக்ஷேபத்திற்கு அனுப்பினார்.

அவர் குலசேகரருடைய மனப்பண்பு அறியாமல், இராவணன் சீதையை யெடுத்துப்போன வ்யசநகரமான செய்தியை உபந்யாஸஞ்செய்ய அது செவிமடுத்த உடனே குலசேகரர் மனங்கொதித்து "நான் இப் பொழுதே வெகுவிரைவாகச் சென்று கடல்கடந்து இலங் கையை நீறுபடுத்தி ராக்ஷஸ ராஜனைப் பந்துமித்திர ரோடும் போரில் தொலைத்து எனது அன்னையை மீட்டு வருவேன்" என்று சொல்லி எழுந்து ஆயுதங்களை எடுத் துக்கொண்டு சேனு சமூகத்தோடு இலங்கையை நோக் கிப்பிரயாணமானார். அப்பொழுது விண்ணுலகத்தாரும், மண்ணுலகத்தாரும் இதனைக் கண்டு பெருவியப்புக் கொண்டு, "இதன் முடிவு என்னுகுமோ?" என்று பெருங் கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியே கடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண் ணீரில் இறங்கி நின்ற சமயத்தில், இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி, இவரைத் தடுப்பதற்கு வேறு

வுதைகயொன்றும் இல்லாமையைக் கருதி தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக்கொண்டு இலக்குமணனோடு எதிரில் வந்து நின்று தரிசனம் தந்து, தமது போர் வெற்றியையும், சத்துருவினாசத்தையும், தேவியை மீட்டதையும், தெளிவாகக்கூறி, பிறவிப்பெருங் கடலினின்று கரையேற்றுவதற்கு ஓர் அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட் செலுத்திவிட்டு பின்பு மறைந்தருளினர்.

இப்படி எம்பெருமானுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்பை உடையவரான குலசேகரர், புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்கக்ஷேத்திர மகிமையைக்கேட்டு, திருவரங்கத்தை நோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்ல வேண்டுமென்ற விருப்பமும், சகல கருமங்களையும் தொலைக்கும்'' என்ற தன்மையையும். அக்கோயிலில் நித்திய வாசஞ்செய்தலும், நம் பெருமாளைக் கண்ணாரக் கண்டு களித்தலும், பேரின்பத்தைத்தரும்'' என்ற தகைமையையும் உணர்ந்து, அங்கு போதற்குமிக்க குதூகலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானர்.

இவர் இவ்விடத்தைவிட்டுச் சென்று பெரிய பெருமாளை சேவிப்பாராயின், மீளுதலரிதென்றும் அங்கேயே நித்திய வாசஞ்செய்ய, கருதிவிடுவாரென்றும் நினைத்து அந்த யாத்திரையைத் தடுக்க மந்திரிகள் ஓர் உபாயம் செய்தனர். அது யாதெனில்:— இவர் ஸ்ரீ வைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்க விருப்பமுள்ளவராதலால், அநேக பாகவதர்களை, அமைச்சர்கள் வரவழைத்து இவர் முன் செலுத்தினர். அறுபதினாயிரம் வருஷகாலம் விஷ்ணுவை ஆராதனஞ்செய்த பயனும், ஒருகால் வைஷ்ணவர்களை பூஜித்த பேற்றுக்கு ஈடாகாது என்ற சாஸ்த்திர முறைமையை ஸ்ரீ வைஷ்ணவர்கள் உணர்த்த நம் குலசேகரரும், அறிந்தவராகையால்

யாத்திரையை நிறுத்தி, ஷோடசோப சாரத்தோடு திருமாலடியார்களை பலவாறு உபசரித்தார். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்கனிந்த அன்போடு கொண் டாடி வருகையில் அந்நாடெங்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரள் மிக்கது.

அரண்மனையினுள்ளும், ஆலோசனை சபாமண்ட பத்திலும், இன்னும் அந்தரங்கமான இடங்களிலும், பாகவதர்கள் எக்காலத்திலும் சிறிதும் தடையின்றிப் போக்கு வரவு செய்தலையும், தமது அரசன் பக்கல் இவர்கள் வரம்பு கடந்த ஸ்வாதந்திரியம் பாராட்டு தலையுங்கண்டு பொருமைகொண்ட மந்திரிகள் இவர் களிடத்துக் குலசேகரருக்கு வெறுப்பையுண்டாக்கக் கருதினர். இவ்வாறு இருக்கையில், அனைவருங்கொண் டாடத்தக்க ஸ்ரீ ராமநவமி மகோத்ஸவம் வந்தது. அதன் பொருட்டு நகரம் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக் கோயிலில் அர்ச்சகர், இராமமூர்த்திக்கும் மற்றும் விக்ரஹ ரூபமாயுள்ள எம்பெருமான்கட்கும் திருமஞ் சனம் செய்தற்பொருட்டு அவர்களுடைய திவ்யாபரணங் களையெல்லாம் களைந்து வைத்தனர்; பின்பு வேதகோ ஷத்தோடும், வாத்திய கோஷத்தோடும் திருமஞ்சனம் நடந்தேறிற்று.

அச்சமயத்தில் யாவரும் ஸ்வாமி சேவையிலே கருத்து ஊன்றி நிற்கையில், மந்திரிகள் ஒரு நவரத்ன மாலையைத் திருவாபரணத்திரளிலிருந்து எடுத்துஒளித்து வைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரம் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணுமல், அர்ச் சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அது கேட்ட அரசன் மனங்கலங்கி மந்திரிகளை அழைப்பித்து, 'கள்வனை விரைவில் தேடிப்பிடியுங்கள்' என்று கட்டளை யிட்டார். அதுவே வியாஜமாக, அவர்கள் "இது கொண்டு போனவர் வைணவரேயன்றி வேறு எவரு

மிலர்; இவர்களே எப்பொழுதும் இங்கு எங்கும் தட்டின்றித் திரிகின்றவர்; பிறனொருவன் புதியவனாக வந்து அஞ்சாது இத்தொழில் செய்யான்'' என்று பாகவதர் மீது அடாப்பழி சுமத்தினர். இக்கடுஞ்சொல்லை செவிமடுத்த அளவிலே, ஆழ்வார், அடியார்கள் மேல் குற்றம் கூறின மந்திரிகளைக் கடிந்து, ''வைஷ்ணவ சிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந்தொழிலை நினைத்தலும் செய்யார்'' என்று உறுதி கூறினர். எனினும், ''அவ்வாறு அவ்வைணவர்கள் இத்தகைய காரியத்தைச் செய்யவில்லை என்று குடப்பாம்பில் கைவிட்டு சத்தியம் செய்வார்களானால் நாம் அவர்களை விடுதலை செய்ய முடியுமே அன்றி வேறு வழியில் அடுத்தவர்களைக் குற்றம் சொல்ல இயலாது'' என்று மந்திரி மார்கள் அரசனிடம் கூறினர்.

இதைக்கேட்ட அரசன் ''இதனை உங்கட்கு உறுதிப்படுத்துதற்காக யானே பிரமாணங்காட்டுவேன்'' என்று சொல்லி, பாம்பை உள்ளிட்டதொரு குடத்தை சபைமுன்பே தருவித்து, ''ஸ்ரீ வைஷ்ணவர் மனம், மொழி, மெய் என்னும் திரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பு என்னை யாதொன்றும் செய்யாது; இல்லையாயின், இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக'' என்று சபதஞ்செய்து, அக்குடத்தினுள்ளே கையிட்டான். அப்பொழுது சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு பாம்பு வாளாவிருந்தது. அது கண்ட அமைச்சர்கள், தமது சூழ்ச்சி பலிக்கவில்லை என்பதை அறிந்து வருத்தமும், தவறு செய்ததை நினைத்து கழிவிரக்கமும், தங்கள் கதியைப்பற்றிய பேரச்சமும்கொண்டு, கவர்ந்த ஆபரணத்தைக் கொணர்ந்து சமர்ப்பித்து, அறியாது செய்த தங்கள் பிழையை மன்னிக்கப் பிரார்த்தித்து, ஆழ்வாருடைய திருவடித் தாமரைகளை சரணமடைந்தார்கள். ஆழ்வார் பொறுமையுடையவராகையால், அவர்கள் பிழையை பொறுத்து, ''இனி நீவிர் பாகவதர்

கட்கு எப்பொழுதும் பணிவிடை செய்வதே, நுமது குற்றம் தீரும் வகை'' என்று சொல்லிவிட, அவர்களும் அங்ஙனமே அடியவர்க்கு அடியராய் குறிப்பறிந்து, குற்றேவல் புரிந்து பேறு பெற்றனர்.

எனவே பாகவதர்களும்,

**ஆரம்கெடப்பரன் அன்பர்கொள்ளார் என்(று) அவர்களுக்கே**
**வாரம்கொடு குடப்பாம்பில் கையிட்டவன், மாற்றலரை**
**வீரம்கெடுத்த செங்கோல், கொல்லிகாவலன், வில்லவர்**
**சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே! [கோன்**

என்று இன்னும் குலசேகரனைப்பற்றி பெருமை கொள்ளுகிறார்கள்.

பின்பு குலசேகரர் பொய்மைக்கு இடமான அரசாட்சியில் இருக்க ஆசைப்படாமல் வெறுப்பு ஏற்பட்டு, ''ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ, வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்'' என்றும், ''கம்பமத யானை கழுத்தகத்தின் மீதிருந்து இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்'' என்றும் ஸங்கல்பித்து தனது குமாரனாகிய த்ருடவிருதனுக்கு பட்டாபிஷேகம் செய்து வைத்து தாம் திருவரங்கம் பெரிய கோயிலுக்குச் சென்று நம் பெருமானை சேவித்து, அவ்வழகிய மணவாளனையே தனக்கு உரிய மணவாளனாகக் கருதிய தன் திருமகளை அப்பெருமானுக்கே உரிய பொருளாகக் கொடுத்து மணஞ்செய்வித்து, மூன்றும் ஆவரணத்தின் தென் மேற்கிலே, சேனை வென்றான் திருமண்டபமும் கட்டி, அந்தத் திருச்சுற்று ஜீரணோத்தாரணம் பண்ணுகையில், அந்தத் திருவீதிக்குக் ''குலசேகரன் திருவீதி'' என்று பெயராக, அத்திருப்பதியில் பகவத் பாகவத கைங்கர்யங்களை விதிமுறை வழுவாது நித்யமுஞ்செய்துகொண்டு சில காலம் தங்கி இருந்தார்.

அவ்வாறு இருக்குங்கால், குலசேககர் திவ்யதேச யாத்திரை செய்ய எண்ணி, திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத் திருச்சித்திரகூடம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ் சோலை முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாளைக் கண்ணுரக் கண்டு சேவித்து அப்பால் நம்மாழ்வாரது திருவவதார ஸ்தலமான திருக்குருகூர்க்குச் சென்று நம்மாழ்வாரையும், ஆதிநாதனையும் முறையால் வணங்கி சில காலம் தங்கி, பின் தாம்பரபரணி நதிக்கும், கருணை நதிக்கும் நடுவணமைந்த பிரம்மதேசத்தில், வேதநாராயணபுரம் என்ற வேதபுரிக்குத் தன் பெருங்குழுவோடு எழுந்தருளி அங்கே தங்கி இருந்தார்.

பிரும்ம வித்வான்கள் நிறைந்த, பொருணையாற்றுலும் கருணையாற்றுலும் தழுவப்பட்டதால் சுற்றிப் பல நீர் நிலைகளாலும் சூழப்பட்டதான அத்திருப்பதி எம்பெருமானிடத்திலே மிகவும் ஈடுபட்டு, "விரைகுழுவும் மலர்ப்பொழில் சூழ்வித்துவக்கோட்டம்மானே" என்றும் "விண்தோய் மதிள்புடைசூழ் வித்துவக்கோட்டம்மா" என்றும், ',மீன் நோக்கும் நீள்வயல் சூழ் வித்துவக்கோட்டம்மா" என்று பலவாருகவும், இத்தனை நாள் பிரிந்திருந்த ஏக்கம் தீர,

**"எங்கும்போய்க் கரைகாணுது எறிகடல்வாய் மீண்டேயும்**
**வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே"**

என்றும் உள்ளம் உருகப்பாடினுர். இவர் க்ஷத்திரியர் ஆகையால் அங்கு இருந்த பிரும்ம வித்துவான்கள், இவர் பெருமையையும், பக்தியையும் அறிய முடியவில்லை. ஆயினும் இவர், "தேட்டரும் திறல்தேனினை" என்ற பதிகத்தைப்பாடி அரங்கனடியாரது அடிமைத்திறத்தில் ஈடுபட்டவர் என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டார். பிரம்ம வித்வான்கள் தங்களுடைய மேதா விலாஸத்தினுல் இவரை மதியாது சிற்றிடர் கொடுக்க, "மாயத்தால், மீளாத்துயர் தரினும் வித்துவக் கோட்

டம்மா! நீ ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே'' என்றும் ''வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக் கோட்டம்மா! என் சித்தம் மிக உன்பாலே வைப்பன் அடியேனே'' என்றும் எம்பெருமானிடத்திலே முறையிட்டு பிரும்ம வித்துவான்களின் வெறுப்பை பகவானின் வெறுப்போ என்று நினைத்து'', வித்துவக்கோட்டம்மா நீ வேண்டாயேயாயிடினும், மற்ருரும் பற்றிலேனென்று அவனைத்தாள் நயந்து'' பெருமானை சிக்கெனப் பிடித்துக் கொண்டு அங்கு எழுந்தருளியிருந்து, அங்குள்ள ஆய்க் குலத்துப்பிள்ளையை அது வரை பிரிந்தமைக்கு வருந்தி ''தேவகி புலம்பல்'' பத்துப் பாட்டு பாடினுர், இந்நிலையில் சில காலம் கழிந்த பின்னர், மேனிதளர்வெய்த தன் திருவாராதனத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமான்களுக்கு நித்தநைமித்திகங்கள் தவறிவிடுமோ என அஞ்சி சக்கரவர்த்தித் திருமகனையும், ஸ்ரீ இராஜகோபாலஸ்வாமியையும் கோயிலிலே எழுந்தருளச் செய்ய வேண்டும் என்று அங்குள்ள பிரும்ம வித்துவான்களிடத்திலே விண்ணப்பித்துக்கொண்டார். அவர்கள் இவருடைய பக்தியை மெச்சினராயினும், தங்களுடைய சாஸ்த்திரத்தில் சிறிதும் விட்டுக்கொடுக்கத் தயாராயில்லை. எனவே'', நீவிர் க்ஷத்திரியர் ஆனதால் நாங்கள் உம்முடைய திருவாராதனத்துப் பெருமான்களை கோயிலில் எழுந்தருளப் பண்ணமுடியாது. இன்று திருவிசாகம் ஆனதும் உம்முடைய கோயிலாழ்வாரைக் கொண்டு ஸந்நிதி முன் வைத்து நும்பெருமானைப் பிரார்த்தியும், நும்பெருமான் திருவுள்ளமுவந்து கோயிலுக்குள் தானே எழுந்தருளுவதாய் இருந்தால், நாளை காலை திருக்காப்பு நீக்கும்பொழுது, அங்கு பெருமாளை சேவித்துக் கொள்ளலாம். நும்பெருமான் திருவுள்ளம்போல் நடக்கும்'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டனர்.

உடனே நம் குலசேகரர் திருவிசாகம் ஆனபின் கோயிலாழ்வாரோடு எழுந்தருளி ''மெய்யில் வாழ்க்

கையை'' என்ற பதிகத்தை திரும்பத் திரும்ப விடியும் வரை, ''பேயரே எனக்கு யாவரும் யானும் ஓர், பேயனே எவர்க்கும் இது பேசி என்! ஆயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன் பேயனுயொழிந்தேன் எம்பிரானுக்கே என்றும், ''அங்கையாழி அரங்கனடியிணை, தங்கு சிந்தைத் தனிப்பெரும் பித்தனுய், கொங்கர்கோன் குலசேகரன் சொன்னசொல், இங்கு வல்லவர்க்கு ஏதமொன்றில்லையே'', என்றும் பாடி முடித்தார்.

காலையில் எல்லோரும் வர, பிரும்ம வித்துவான்கள் முன்னிலையில், திருகாப்பு நீக்கப்பட்டது. பிரும்ம வித்துவான்கள், சக்கரவர்த்தித் திருமகனும், இராஜகோபாலஸ்வாமியும் கோயிலுக்குள் எழுந்தருளியிருப்பதைக்கண்டு, குலசேகரர் அடியில் வீழ்ந்து, ''நீரே வாழ்வார். நாங்கள் பல பல சாஸ்திரங்கள் கற்றும் நும் பெருமையையும் பேற்றையும் உணராது நும்மை பலவாருன துன்பங்களுக்கு உள்ளாக்கியதற்கு வருந்துகிருேம். க்ஷமித்தருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர்.

கருணையே உருவான குலசேகரர் அந்த வைணவ அடியார்களின் அடிபணிந்து, ''பெருமானே! நீரே இவர்களை க்ஷமிக்கவேண்டும்'' என்று திருமாலை வேண்டிக்கொண்டு தன் திருமாளிகைக்கு எழுந்தருளினுர்.

இவ்வாருகச் சில நாளில், திருமேனி மிகுந்த தளர்வெய்த, படுக்கையிலிருந்தவாறே நம் குலசேகராழ்வார், சக்கரவர்த்தித் திருமகனைப் பிரிந்த வருத்தம் தீர தசரதன் புலம்பல் என்ற பதிகத்தையும் பாடி'' ஆய்மிகு காதலோடுயானிருப்ப யான்விட வந்த என் தூதியோடே, நீ மிகு போகத்தை நன்குகந்தாய், அதுவும் உன் கோரம்புக்கு ஏற்குமன்றே;' என்று அந்த பிரும்ம வித்துவான்களால் பூஜிக்கப்பட்டு பகவான் இருப்பதை

ளடலாகப் பாடினர். இராஜகோபாலனும் அவர்க்கு இரங்கி சேவைசாதிக்கவே, அவரை சேவித்து, "கண்ணுற்றவளை நீ கண்ணைவிட்டுக் கைவிளிக்கின்றதும் கண்டே நின்றேன், என்னுக்கு அவளைவிட்டு இங்கு வந்தாய்? இன்னம் அங்கே நட நம்பி! நீயே" என்றும், "அற்றை இரவும் ஓர் பிற்றை நாளும் அரிவையரோடும் அணைந்து வந்தாய்; எற்றுக்கு நீ என் மருங்கில் வந்தாய்? எம்பெருமான் நீ எழுந்தருளே" என்றும் "செய்ய உடையும் திருமுகமும் செங்கனி வாயும், குழலும் கண்டு, பொய் ஒரு நாள் பட்டதே அமையும்; புள்ளுவம் பேசாதே போகு, நம்பி!" என்று பிரும்ம வித்துவான்களுடைய கோயிலுக்கே நீ சென்றடை, என்று வேண்டிக்கொண்டார். இவ்வாருக பகவானேடு அன்பினல் கலந்தே நின்ற நம் குலசேகரர் உடல்நிலை குலைய ஆரம்பித்தது.

அந்த நிலையிலும் தான் பரவசப்பட்டிருந்த இராமசரிதத்தை "அங்கணெடுமதில்" என்ற பதிகத்தால் தான் கடைசியாக சேவித்த, தில்லைத் திருச்சித்திர கூடத்து அர்ச்சாவதாரத்து எம்பெருமானிடத்தில் ஈடுபட்டு பெருமான் இராமனை அவதரித்து, பரமபதம் சேர்ந்தது வரை பாடி முடித்தார்.

இந்நிலையில் வேதநாராயணன், நம் குலசேகரன் பரமபதத்தை விரும்புகிருனென்று, வீற்றிருந்த திருக்கோலத்தில் பரமபதநாதன்போல் சேவை சாதித்தார். ஆயினும் குலசேகரர் பெருமானுடைய பிரார்த்தனையிலேயே கண்ணை மூடிக்கொண்டு மெய்மறந்திருந்தார்.

குலசேகரரின் பக்தி நிலையை நன்கு உணர்ந்த பிரும்ம வித்துவான்கள், அவர் தங்களைவிட்டு பிரிந்து விடுவாரோ என அஞ்சி, பெருமானிடத்தில் சென்று, "பக்தியின் நிலைக்களத்தைப் பாதுகாத்திடுமின்! பரம

பாவனனை பாருக்குப் பணித்திடுமின்! பூவுலக சோதியை பூமியில் புரந்திடுமின்! மன்னன் இன்றி மண்ணுலகம் எவ்வாறு உய்யும்? மாநிலம் அருள்வழிச் செல்ல ஆழ்வாரை எமக்கு அளித்திடுக!'' என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

பகவானும் அசரீரிவாணி சொல்லுமாப்போலே, ''நீங்கள் உலோகத்தில் ஓர் அர்ச்சையைச் செய்து, நம் முன் எழுந்தருளப் பண்ண, நாம் வேதங்களை, பிருகு, மார்க்கண்டேயர், மூலமாக உலகுய்ய அருளுவதுபோல், நம் குலசேகரனும், இம்மண்குலம் உய்ய, பக்தி நிலையைப் பரப்பிக்கொண்டு, உங்களிடையே அர்ச்சையில் எழுந்தருளி இருப்பான்'' என்று அருளினார்.

அவ்வாறே பிரும்ம வித்துவான்கள் ஓர் விக்கிரகம் செய்து, பெருமான் முன் எழுந்தருளப் பண்ணினர்.

அவ்வேளையில் குலசேகரர் அரங்க நகரப்பன் மேல் உண்டான பிரேமையில், ''அரங்கா! அரங்கா!'' என்று கூவிக்கொண்டே, ''இருளிரியச் சுடர்மணிகள்'' என்ற பதிகத்தை மகர ஞாயிற்று ஆதிரை நாள் பாடினார்.

உடன் பகவானும் நம் குலசேகராழ்வார் விருப்பத்தை அறிந்து, அரங்க நகரப்பன்போல் பள்ளி கொண்ட திருக்கோலத்தில் சேவை சாதித்தார்.

தக்ஷணமே ஆழ்வார் திருமேனியினின்றும் ஓர் ஜோதி கிளம்பி, பிரும்ம வித்துவான்கள் முன்னிலையில் அர்ச்சையில் பிரவேசித்தது. பிரும்ம வித்துவான்கள். ''ஜய விஜயீபவ! ஜய விஜயீபவ! என்று கோஷமிட்டு வணங்கினர்.

இதற்குப் பின்னர் வேதவிமானம் அஷ்டாங்க வேதவிமானமாக வளர்ந்து பிரும்ம வித்துவான்களால் பூஜிக்கப்பட்டு வந்தது.

நம் குலசேகரன் பெருமானிடத்தில் உண்டான பக்தி மேலீட்டால் பல சமயங்களில் அருளிச்செய்தவையே "பெருமாள் திருமொழி" என்னும் தமிழ் நூலும், "முகுந்தமாலை" என்னும் வடமொழி நூலும் ஆகும்.

"அரசமர்ந்தானடிசூடும் அரசை அல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசுதானே" என்று கோவிந்த பாதார விந்தத்தை சிரமேற்கொள்ளுதலையே இவர் கிரீடாபிஷேகமாகப் பாவித்தார். இவர் சக்கரவர்த்தித் திருமகனின் சுகதுக்கங்களை, குகப்பெருமாள் போல் தன்னதாகவே நினைத்து. தன் உயிரையும், அவனுக்காக கொடுக்கத் துணிந்தமையின், இவர்க்கு, "பெருமாள்" என்று பெயர் வழங்கலாயிற்று.

இவ்வாழ்வார், "படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்று திருவேங்கடத்து எம்பெருமானை உள்நெகிழ்ந்து வேண்டியமை பற்றி பெருமாள் கோயில்களில், கோயிலின் உள்வாயிற்படி, "குலசேகரன்படி" என்று வைணவர்களால் இன்றும் வழங்கப் படுகிறது.

**அஞ்சனமாமலைப் பிறவி யாதரித்தோன் வாழியே**
**அணிஅரங்கர் மணத்தூணை யடைந்துய்ந்தோன் [வாழியே**
**வஞ்சி நகரந்தன்னில் வாழவந்தோன் வாழியே**
**மாசிதனிற் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே**
**அஞ்சலெனக் குடப்பாம்பி லங்கை யிட்டான் வாழியே**
**அநவரத மிராமகதை யருளுமவன் வாழியே**
**செஞ்சொல் மொழி நூற்றைஞ்சும் செப்பினன் வாழியே**
**சேரலர்கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே.**

வேதவல்லித்தாயார் வேதநாராயணன் திருவடிகளே சரணம்.

இராஜகோபாலன் திருவடிகளே சரணம்.

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

# 3. இட அமைப்பு.

மன்னார்கோவில் என்ற திருப்பதி, திருநெல்வேலி மாவட்டத்திலே, அம்பாசமுத்திரம் தாலூகாவிலே, அம்பாசமுத்திரம் நகருக்கு வடமேற்கில் மூன்று மைல் தூரத்திலே உள்ளது. இத்திருப்பதி திருநெல்வேலி யிலிருந்து அம்பாசமுத்திரம் மார்க்கமாக செங்கோட்டை செல்லும் பெருவழியிலே, இருபத்தெட்டு மைல் தூரத்தில் உள்ளது. இவ்வூர் திருநெல்வேலியையும், செங்கோட்டையையும் இணைக்கும் பெருவழியில் இருப்பதால் மோட்டார் பஸ்கள் அடிக்கடி போக்கு வரவு உண்டு. இரயில் மார்க்கமாக வருகிறவர்கள் திருநெல் வேலிக்கும், தென்காசிக்கும் நடுவிலுள்ள அம்பாசமுத் திரம் இரயில்வே ஸ்டேஷனில் இறங்கி மாட்டு வண்டியில் இவ்வூருக்கு வந்து சேரலாம். திருநெல்வேலி யிலிருந்து பஸ்ஸில் வருபவர்கள், திருநெல்வேலி, செங் கோட்டை பஸ்ஸில் ஏறி இவ்வூரில் இறங்கவேண்டும். தென்காசியிலிருந்து வருபவர்கள், செங்கோட்டை, திருநெல்வேலி அம்பாசமுத்திரம் மார்க்கமாகச் செல்லும் பஸ்ஸில் ஏறி இவ்வூரில் இறங்கவேண்டும்.

இவ்வூரில் இரவு தங்குவதற்கு சத்திரங்கள் ஒன்றும் கிடையாது. ஆகவே யாத்திரீகர்கள், பகலில் வருவதுதான் உத்தமம். இரவு தங்க நினைத்தால் அம்பாசமுத்திரத்திலுள்ள தங்கும் விடுதிகளில்தான் தங்கவேண்டும். இவ்வூரைச் சுற்றி குளங்கள் இருக் கின்றன. அம்பாசமுத்திரத்தை அடுத்து தாம்பிரபர ணியும், இவ்வூரை அடுத்து கருணை நதியும் ஓடுகின்றன. இவைகளிலெல்லாம் நல்ல தண்ணீரே, பெருக்கெடுத்து தங்கியும், ஓடிக்கொண்டும் இருக்கிறது. இத்தண்ணீர் குடிக்க உபயோகமாக இருக்கும்.

இங்கு இருமடங்கள் இருக்கின்றன. ஒன்று வானமாமலை மடம், கோவிலை அடுத்துள்ளது. இரண்டாவது பெரிய நம்பி திருமாளிகை.

இவ்வூருக்கு ஐந்து மைல் தூரத்திலே பாபநாசம் என்ற ஊர் இருக்கிறது. அதற்கு மேலே தான் பாபநாசம் அணை முதலியன இருக்கின்றன. இவ்வூரிலிருந்து பத்து மைல் தூரத்திலே மணிமுத்தாறு அணை இருக்கிறது. ஆகவே இது மலை அடிவாரத்தில் உள்ள புராதனமான திருப்பதியாகும்.

# 4 கோவில்.

இக்கோயில் முன்னாளில் பொருணையாற்றாலும், கருணையாற்றாலும் தழுவப்பட்டு, நீர் நிலைகளாலும், அடர்ந்த காடுகளாலும் சூழப்பட்டு, பொதிகை மலையின் அடிவாரத்தில் வைஸத்த க்ஷேத்திரமாய் அமைந்தது. இக்கோயில் மூலமூர்த்தியின் திருநாமம் வேதநாராயணன், இவர் நின்ற மூர்த்தி, இவருக்கு இருமருங்கிலும் ஸ்ரீ தேவியும், பூ தேவியும் இருக்கின்றனர், வலப் பக்கத்துச் சுவரில் பிரம்மனும், இடப் பக்கத்துச் சுவரில் சிவனும், நடுவில் இவரும் எழுந்தருளியிருக்கும் காட்சி வேதநாராயணன் ஸர்வேஸ்வரனாக காட்சி அளிப்பதை நினைவூட்டும், பெருமானடியில் பிருகுமகரிஷியும், மார்க்கண்டேய மகரிஷியும் வேதோபதேசம் செய்யும் பாணியிலே, சின் முத்திரையோடு எழுந்தருளியிருக்கிறார்கள்.

வேதநாராயணன் இந்தக் கோயிலுக்கு ஆதி தெய்வம். ஆகையால், அவருக்கு உத்ஸவ மூர்த்தியும்

எழுந்தருளியிருக்கிறார், நித்திய உத்ஸவராகிய செல்வரும் எழுந்தருளியிருக்கிறார். வேதநாராயணனுக்குப் பக்கத்தில் வேதவல்லித் தாயாரும், புவனவல்லித் தாயாரும் உத்ஸவமூர்த்திகளாக அமர்ந்திருக்கின்றனர். இந்தத் தாயார் உத்ஸவ மூர்த்திகளுக்கு தனிக் கோயில்கள் இருக்கின்றன. அங்கு தாயார் மூலவர்கள் எழுந்தருளியிருக்கின்றனர்.

கர்ப்பக் கிரஹத்திற்கு வெளியே அர்த்த மண்டபம் இருக்கிறது. அதன் நடுவே ஓர் மண்டபமும் வேதிகையும் இருக்கின்றன. இந்த வேதிகையில் குலசேகராழ்வாரோடு எழுந்தருளிய திருவாராதன சக்கரவர்த்தித்திருமகன் பிராட்டியோடும், இலக்குமணனோடும் எழுந்தருளியிருக்கிறார். இம்மண்டபத்தின் மேல்பக்கமும், வடபக்கமும் உள்ள திண்ணைகளில் காட்டுமன்னார், கண்ணன், சக்கரத்தாழ்வார் முதலியவர்களும், ஆழ்வாராதிகளும், ஆசாரியர்களில் இராமானுஜரும், மணவாள மாமுனிகளும், எழுந்தளியிருக்கின்றனர். இந்த மண்டபத்திலிருந்து வேதநாராயணனைச்சுற்றி ஒரு பிரதக்ஷிணம் இருக்கிறது. ஆனால் அதை அடைத்திருக்கின்றனர். இந்த மண்டபத்திற்கு தென்கிழக்கு மூலையில் மேலே போவதற்கு ஒரு படிக்கட்டு இருக்கிறது. இவ்வழியையும் அடைத்திருக்கின்றனர்.

இம்மண்டபத்திற்கு வெளியே வந்தால் ஓர் பெரிய மண்டபம் இருக்கிறது. இதற்கு மற்ற ஊர்களில் மகாமண்டபம் என்று பெயர். ஆனால் இவ்வூரில் இதற்கு குலசேகர மண்டபம் என்று பெயர். இதிலும் ஓர் உள் மண்டபமும், வேதிகையும் இருக்கின்றன, இந்த வேதிகைக்கு விஸ்வநாத நாயக்கன் பீடம் என்று பெயர். இந்த வேதிகையில் குலசேகராழ்வாரின் திருவாராதனப்பெருமாள் ஸ்ரீ இராஜகோபாலனும், ஆண்டாளும், கருடனும் எழுந்தருளியிருக்கின்றனர்.

சக்கரவர்த்தித் திருமகனும், ஸ்ரீ இராஜகோபாலனும் குலசேகராழ்வாருடைய திருவாராதன எம்பெருமான்களாகையால் இவர்களுக்கு மூலமூர்த்திகள் இவ்வூரில் கிடையாது.

இராஜகோபாலனுக்குப் பக்கத்தில் ஓர் மேடையில் குலசேகராழ்வார் உத்ஸவர் எழுந்தருளியிருக்கிறார்.

இம்மண்டபத்திற்கு வெளியே உள்ள கிளிக்குறடும், மண்டபமும், மணி மண்டபம் என்று பெயர் பெறும். இக்குறட்டிலிருந்து வலப் பக்கத்துப் படிகளில் இறங்கிச் சென்றால் தென்கிழக்கு மூலையில் ஓர் பெரிய மடப்பள்ளி இருக்கிறது. பின் தெற்குப் பிரதக்ஷிணத்தில் மேற்கு நோக்கிப் போகும் பொழுது, நடுவில் சாந்தமே உருவெடுத்த, யோக நரசிம்மர் ஸந்நிதி இருக்கிறது. அவரை சேவித்துவிட்டு, வேதவல்லித்தாயார் ஸந்நிதிக்குப் படிக்கட்டுகளில் ஏறிச்செல்லவேண்டும். தாயார் தன் பக்தர்களுக்கு அருள் மழை பொழிந்து கொண்டு வீற்றிருப்பதை சேவித்துவிட்டு, வலமாக ஸந்நிதியைச் சுற்றி, வடபக்கமுள்ள படிகளில் இறங்கி வந்து, தெற்குப் பிரதக்ஷிணத்தின் நடுவிலுள்ள, படிகளில் ஏறி, மாடிக்குச் சென்று, அங்கு வேதநாராயணன், பரமபதநாதன்போல் வீற்றிருந்து சேவை சாதிக்கும் அவசரத்தைக்கண்டு களித்து, வணங்கிவிட்டு, குழந்தைகளால் யானை முடுக்கு என்று சொல்லப்பட்ட அப்பெருமானை வலம் வரும் பிரதக்ஷிணம் செல்லவேண்டும். பின் அந்த மண்டபத்திலிருந்து கீழ்ப்புறமுள்ள படிவழியாக மேலே சென்று, அரங்கநகரப்பன்போல் பள்ளிகொண்டிருக்கும் வேதநாராயணனை சேவிக்கவேண்டும். இந்த ஸந்நிதியில் பெருமாள் பள்ளிகொண்டு, நாபிகமலத்தில் பிரும்மா எழுந்தருளியிருக்க, ஸ்ரீ பூமி நீளைகளோடே, அநந்த சயனத்தில் இருக்கிறார். இங்கும் வேதநாராயணன் ஸர்வேஸ்வரனாகக் காட்சி அளிக்கிறார் என்பதற்கு

இணங்க வலப்பக்கத்துச் சுவரில் பிரும்மாவும், இடப் பக்கத்துச் சுவரில் சிவபிரானும் எழுந்தருளியிருக்கின் றனர். பெருமாளைத் தவிர வலப் பக்கத்தில் கருடனும், இடப்பக்கத்தில் விபீஷணனும், மாலியவானும் எழுந்த ருளியிருக்கின்றனர். கீழே பிருகுமகரிஷியும், மார்க்கண் டேய மகரிஷியும் எழுந்தருளியிருக்கின்றனர். இப்பள்ளி கொண்ட பெருமாளையும் சுற்றி குழந்தைகளால் பூனை முடுக்கு என்று சொல்லப்பட்ட ஓர் பிரதக்ஷிணம் இருக் கிறது. இப்பள்ளிகொண்ட பெருமாளைச் சுற்றி ஸப்தப் ராகாரம் ஸ்ரீரங்கத்தில் உள்ளதுபோல் இருக்கிறது. ஆகையால் இங்கே பெருமாளை சேவித்தால் அரங்கநாதனை சேவித்த புண்ணியம் உண்டு என்பது கர்ண பரம்பரை. இப்பொழுது இங்கு உள்ள விமானம் அஷ்டாங்க வேத விமானமாகும்,

இப்பெருமாளையும் வலம் வந்து படிகளில் கீழிறங் கிச்சென்று தெற்குப் பிரதக்ஷிணத்தை அடைய வேண்டும். பிறகு மேற்குப் பிரதக்ஷிணம் வழியாக வடக்குப் பிரதக்ஷிணத்திற்குப் போய், அங்கு பரமபத வாசலுக்கு மேற்கே உள்ள படிகளில் ஏறி வடக்கு நாச்சியார் ஸந்நிதியை அடையவேண்டும். அங்கு எழுந்தருளியிருக்கும் புவனவல்லித் தாயாரை சேவித்து விட்டு, வலம் வந்து கிழக்கே உள்ள படிகளில் இறங்கி, வடகீழ் மூலைக்குச் சென்றவுடன், அங்கு தெற்கு நோக்கி இருக்கும், விஷ்வக்சேனரை சேவித்துக்கொண்டு, சின்னக் கோபுர வாசல் வழியாக, கொடிமர மண்டபத் திற்கு வந்து, அங்கும் வலம் நோக்கிச் சென்று கோவிலை பிரதக்ஷிணம் செய்தால் வெளிவடக்குப் பிரதக்ஷிணத்தில் இராப்பத்து உத்ஸவ மண்டபமும், அதற்குக் கிழக்கே, தெற்கு நோக்கி, குலசேகராழ்வார் ஸந்நிதியும் இருக் கின்றன. இவருக்கு முன் காலத்தில், மாசிப் புனர் பூசத்தில் உத்ஸவம் நடத்திக்கொண்டிருந்தனர். இவருக்கு தனிக்கோயிலும், கொடிமரமும், தேரும்

இருக்கும் சிறப்பைப் பார்த்தால், இங்கு இவ்வாழ்வார் எவ்வளவுசிறப்பாகக் கொண்டாடப்பட்டார் என்பது தெரிய வரும்.

இக்குலசேகராழ்வாருக்கும், கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், கொடிமரமண்டபம், கர்ப்பக்கிரகத்தையும், அர்த்தமண்டபத்தையும் சுற்றி பிரதக்ஷிணம், முதலியவை இருக்கின்றன. இவ்வாழ்வாரைச் சுற்றியுள்ள வெளிச்சுவரிலும், கோவில் வெளிப் பக்கத்துச் சுவரிலும், கல்வெட்டுக்கள், இவருடைய நித்த நிமந்தங்களுக்கும், உத்ஸவங்களுக்கும், தைத் திருவாதிரை அன்று வேதநாராயணன் எழுந்தருளி மங்களா சாஸனம் ஆவதற்கும் ஓர் குளப்பற்றும் வீட்ட விவரங்களெல்லாம் இருக்கின்றன.

இந்த ஸந்நிதி கர்ப்பக் கிரகத்தில் ஆழ்வார் கூப்பிய கையோடு எழுந்தருளியிருக்கிறார். அவரைச் சுற்றி சுவரில் மற்றைய பத்து ஆழ்வார்களும் எழுந்தருளியிருக்கின்றனர். எல்லாம் ஓவியமாகத்தான், கோயிலின் புராதனச் சிறப்புக்கு இயைய. இங்கு ஆழ்வாரை சேவித்துக்கொண்டு வலம் வந்து, ஆழ்வார் கோயிலுக்கு வெளியே வந்தவுடன், கிழக்கே ஓர் பெரிய ஸந்நிதி இருக்கிறது. இதுதான் உடையவர் ஸந்நிதி. இந்த ஸந்நிதி நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டதற்கு ஏற்ப, அவர்களுடைய சிற்பச்சிலைகள் சுற்றிச்சூழ, ஓர் சதுரமண்டபத்தில் இருக்கின்றன.

இம்மண்டபத்தில் குமாரகிருஷ்ணப்ப நாயக்கரின் சிலை முதன்மையாகத் தெரிவதால் இம்மண்டபம் அவராலேயே கட்டப்பட்டது என்று ஊகிக்கலாம். இங்கு, இக்கோயிலுக்கு பல திருப்பணிகள் முழுப் பொருப்போடு செய்த, செண்டலங்கார மகாமுனிகள் சிலையும், பராங்குசதாசர் சிலையும் வெகு அழகாக இலங்குகின்றன.

இந்த இராமானுஜர் ஸந்நிதி சதுக்கமண்டபத் தூண்களில், இராமர், இலக்குமணர், சீதை, அனுமார் முதலியவர்களுடைய சிற்பங்களும், நாயக்கர் வம்சத்து அரசர்களுடைய சிற்பங்களும், ஓர் வேடனுடைய சிற்பமும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இச்சந்நிதியில் இளையாழ்வாரான உடையவரை வணங்கிவிட்டு, வெளிவந்து கீழ்புறம் இருக்கும் ஸந்நிதிக்குச் செல்லுவோம்.

இதுவும் உடையவர் ஸந்நிதிபோல் பெரியதுதான். இங்கு தென்னுச்சாரிய சம்பிரதாயத்திற்கே ஊன்று கோலான மணவாளமாமுனிகள் எழுந்தருளியிருக்கிருர். அவரையும் வணங்கிவிட்டு வெளிவந்து, கொடிமர மண்டபத்தை வலமாகவர, மண்டபத்தின் மேல் முகட்டில் மண்டபத்தைச் சுற்றிவர எம்பெருமான் உருவங்களை பல அவதாரங்களிலிருந்து எடுத்து கல்லில் செதுக்கியிருக்கின்றனர். மண்டபத்தின் மேல்புறம் தென்மேற்கு மூலையிலிருந்து,

I சிற்பம் கஜலக்ஷிமி.
II ,, யோகநரசிம்மர்.
III ,, அநந்த சயனம்.
IV ,, வேதநாராயணன் வீற்றிருந்த திருக்கோலத்தில்.
V ,, சடகோபர், மதுரகவியுடனும், நாதமுனிகளுடனும்.
VI ,, இராமானுஜர்.
VII ,, பிரும்ம வித்துவான்கள் வணங்கும் காட்சி.

மற்றைப் பக்கங்களில் பாகவதக் காட்சிகள் சில செதுக்கப்பட்டிருக்கின்றன. இராமாயணத்தையும் ஆரம்பித்து, வாலி சுக்கிரீவன் சண்டைவரை செதுக்கப்பட்டிருக்கிறது. மண்டபமுகட்டின் வலப்புறம் ஆழ்வாராதியர்களும் செதுக்கப்பட்டிருக்கின்றனர்.




கொடிமர மண்டபத்தில் ஸந்நிதிக் கருடனை வலம் வந்து சேவித்துக்கொண்டு பிரதான கோபுர வாசலைத் தாண்டி வெளிவந்து வலப்புறம் மாடவீதிக்குச் சென்று மேலே நோக்க வானளாவிய ஐந்து தட்டு கோபுரம் காட்சி அளிக்கும். மாடவீதி பிரதக்ஷிணமாக வந்து வடகிழக்கு மூலைக்கு வந்தவுடன், மூலைக்கருடாழ்வார் ஸந்நிதியில், கருடாழ்வாரை சேவித்துக்கொண்டு, கோபுர வாசலில் பந்தல் மண்டபத்திற்கு வருகிறோம். இது நாயக்கர் காலத்தில் அவர்களது ஆட்சியின் கீழிருந்த ஓர் பாண்டிய அரசனால் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் பாண்டியர்களின் சின்னமான மீன்களை மண்டப முகட்டில் காணமுடிகிறது. தவிரவும் அங்கு முத்துகிருஷ்ணப்ப நாயக்கனுடைய சிலையும், அவனுடைய தளவாய் ராமப்பையனுடைய சிலையும், கூப்பிய கைகளுடன் இருதூண்களில் இருக்கின்றன. ஆகவே நாயக்கருக்கு உட்பட்ட பாண்டிய அரசன் என்று எண்ண இடமிருக்கிறது.

இந்த மண்டபத்தின் தென்புறம் உள்ள மண்டபம் வானமாமலை மடம் ஆகும். அங்கு அரங்க நகரப்பன் எழுந்தருளியிருக்கிறார்.

இந்த பந்தல் மண்டபத்தின் படிகளின் வழியாகத் தெருவில் இறங்கியவுடன் வடபுறம் பெரிய நம்பிகள் திருமாளிகை இருக்கிறது.

நேரே ஸந்நிதித் தெருவழியாகச் சென்று கோடியில், தென்கிழக்கு மூலையில் ஓர் தெப்பக்குளம் இருக்கிறதை நாம் காணலாம். இது தான் பிருகு தீர்த்தம். இங்கு பெத்து நாயக்கன் என்பவர் இந்தக் குளத்தை ஒழுங்காகக் கட்டி, தெப்பம் நடப்பதற்கு ஏற்பாடு செய்த விஷயம், கல்வெட்டுக்களிலிருந்து தெரிய வருகிறது.

----

இக்கோயிலின் குலசேகர மண்டபத்தை குலசேகரப்பெருமாள் ராஜா என்ற சேர அரசன் கட்டியதாகத் தெரிகிறது. அதைச்சுற்றியுள்ள திருமதிலையும் பரமபதவாசலையும் புதுக்கிக் கட்டியவன்தான் ஜடாவர்மன் குலசேகர பாண்டியன் என்ற பாண்டிய அரசன். ஏனெனில் அந்த வாசல்களில் மட்டுமே இணை மீன்கள், மேல் முகட்டில் காணப்படுகின்றன.

ஆகவே மன்னார்கோவில் மலையாளத்து அரசர்களாலும், பாண்டிய அரசர்களாலும், நாயக்க அரசர்களாலும் மிகுந்த சிறப்போடு போற்றப்பட்டு, தேரும் திருவிழாவும் நடந்த பெரும் திருப்பதி என்று அறியலாம்.

## 5. வரவு செலவு.

இக்கோயிலின் வரவு செலவுகளாவன.

| நெ. | வரவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1 | தஸ்திக் | 1052 | 12 | 4 |
| 2 | கோரை மாசூல் | 100 | 0 | 0 |
| 3 | தோப்பு மாசூல் | 300 | 0 | 0 |
| 4 | குளம் பாசி | 250 | 0 | 0 |
| 5 | கடைக்குத்தகை | 100 | 0 | 0 |
| 6 | நெல் விற்றுமுதல் | 180 | 0 | 0 |
| | ஆக மொத்தம் | 1982 | 12 | 4 |

| நிர். | செலவு | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1 | சிப்பந்திச் செலவு | 648 | 0 | 0 |
| 2 | தபால் செலவு | 5 | 0 | 0 |
| 3 | அமுதுபடி செலவு | 500 | 0 | 0 |
| 4 | பலசரக்கு சாமான் | 239 | 12 | 4 |
| 5 | ஷட்டு கரண்டு | 130 | 0 | 0 |
| 6 | மாச விசேஷம் | 50 | 0 | 0 |
| 7 | இராப்பத்து பகல்பத்து உத்ஸவம் | 240 | 0 | 0 |
| 8 | கிஸ்து | 55 | 0 | 0 |
| 9 | காண்ட்ரிபியூஷனும் ஆடிட்டும் | 105 | 0 | 0 |
| 10 | கோர்ட் சிலவு | 10 | 0 | 0 |
| | ஆக மொத்தம் | 1982 | 12 | 4 |

## 6. நிர்வாகம்.



இந்துமத தர்மபரிபாலன போர்டு நிர்வாகத்திற்கு உட்பட்டு நடந்து வருகிறது. இப்பொழுது தர்மகர்த்தாவாக உழைப்பவர் ஸ்ரீ கோ. அய்யாக்குட்டி அய்யங்கார் அவர்கள் ஆவர்.

இருளிரியச் சுடர்மணிகள் மங்களா சாஸனத்திற்காக, பெருமாள் குலசேகராழ்வார் சந்நிதிக்கு எழுந்தருள நாடாள்வான் குளம் என்ற குளப்பற்று விடப்பட்டிருப்பது இக்கோயில் கல்வெட்டில்க் காணலாம்.

# 7. இலக்கியம்.



ஸ்ரீ குலசேகராழ்வார் பாடிய வித்துவக்கோட்டம்மான் விஷயமான பதிகம், இவ்வூர் வேதநாராயணப் பெருமாளிடத்தில் குலசேகரருக்கு உண்டான ஆழ்ந்த பக்தியைக்குறிப்பதாக இவ்வூரார் எண்ணுகின்றனர். ஆகவே இவ்வூர்ப் பாட்டென்றே அப்பதிகம் சேவிக்கப்படுகிறது. ஆழ்வார் பாடல் பெற்ற ஸ்தலமுமாகும். மற்றும் இராஜகோபாலன் அல்லது இராஜமன்னர் விஷயமாக "உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள்" என்ற நம்மாழ்வார் பாடலும் அனுஸந்திக்கப்படுகிறது.



# ஆராய்ச்சிப் பகுதி.

எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (குறள், 43—3)

## 1 தென்பாண்டி நாட்டில் திருமால் சமயம்.

உலகம் தோன்றிய நாள் முதல் நம் பரத கண்டத்திலே அநாதியாய் நிலைபெற்றுள்ள மதம் திருமால் சமயம் என்பது வேத வேதாங்கங்களாலும், உபநிஷதங்களாலும், இதிகாச புராணங்களாலும் தெரியவரும். தமிழ் நாட்டிலே திருமால் சமயம் தொன்று தொட்டு நிலவி இருந்து பலரும் திருமாலை பரதெய்வமாகப் பரவிவந்தனர் என்பது தமிழ் நூல்களை ஆராய்வோர் அறியக்கூடும். தமிழ் நாட்டவர்க்கு என்று ஓர் தனி நாகரீகம் இருந்து வந்தது. அவர்கள் நிலப்பகுதியை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று நான்கு வகையாகப் பிரித்து நானிலம் என்று இவ்வுலகத்திற்கு பெயரிட்டழைத்ததிலிருந்து அவர்கள் அறிவின் திறன் நமக்கு நன்கு புலனாகும். இத்தகைய அறிவிற் சிறந்த தமிழ் மக்கள் தங்கள் வாள்வலியாலும் தோள்வலியாலும், பெண்களின் மாசற்ற காதலினாலும் தங்கள் நாகரீகத்தை வளர்த்து வந்தனர். அவர்கள் முதிர்ந்த நாகரீகத்தில் தெய்வ வழிபாடும் ஒன்று, அவர்களுடைய நான்கு நிலப்பகுதிகளிலும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு கடவுளரை அவர்கள் வழிபட்டு வந்தனர் என்பது பெறப்படும். அகத்தியனாரின் மாணாக்கர் தொல்காப்பியனார் அந்நான்கு நிலப்பகுதிகளையும் அவற்றிற்கு உரிய தெய்வங்களுடன் பாகுபடுத்துமிடத்தே,

மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீன்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலென
சொல்லிய முறையாற் சொல்லலும்படுமே

(பொருளதிகாரம் அகத்திணை 5)

என்று கூறியுள்ளார்.

இவற்றிலிருந்து மாயோனாகிய திருமால் காடும் காடு சார்ந்த இடத்திற்கும், சேயோனாகிய முருகன் மலையும் மலை சார்ந்த இடத்திற்கும், வேந்தனாகிய இந்திரன் ஆறும் ஆறு சார்ந்த இடத்திற்கும் வருணன் கடலும் கடல் சார்ந்த இடத்திற்கும், தெய்வங்களாக, தொல்காப்பியனாருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே தமிழ் மக்களால் வழிபடப்பட்டு வந்தனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும்.

ஆகவே மாயோனாகிய திருமாலுக்கு, ஆதிகாலத்தில், தமிழ்நாட்டில், காடும் காடுசார்ந்த இடங்களில் கோயில்கள் அமைந்திருக்கவேண்டும், அக்காடுகளில் வாழ்பவர்கள் தமிழ் நாட்டு முல்லை நிலத்திற்கு உரிய "ஆயர்" என்று தொல்காப்பியர் கூறுவர். (தொல்காப்பியம் அகத்திணை 21) எனவே ஆய்க்குலத்துள் வளர்ந்த கண்ணபிரானே முல்லை நிலத்து மக்கள் வணங்கிய திருமாலவதார மூர்த்தியாவர்.

கிறிஸ்து பிறப்பதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னமேயே திருமால் வழிபாடு சிறந்த முறையில் தமிழ் மக்களிடை இருந்து வந்தது. அவர்கள் இராமாயணத்தை அறிந்திருந்தனர் என்பது,

"வெள்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழுங்கிரும் பௌவமி ரங்கும் முன்றுறை
வெல்போரி ராமனருமறைக் கவித்த
பல்வீ ழாலம்"

(அகநானூறு, பாடல் 70)

[கவுரியர் = பாண்டியர், கோடி = தனுஷ்கோ, பௌவம் = சமுத்திரம், மறை = இரகசியம், அவித்த = அடக்கிய] என்ற பாடல் மூலமாகவும், அறியலாம். பாரதத்தை அறிந்தும், அக்காலத்தில் வாழ்ந்தும் இருந்தனர் என்பது,

" துறக்க மெய்தியதொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய வுதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை "

(அகநானூறு பாடல் 233)

என்றவரிகள் மூலமாகவும் நன்கு அரியலாம்

திருமாலே முழுமுதற் கடவுள்: எங்கும் நிறைந்தவர்; எல்லாமாய் இருப்பவர் என்று பரதத்வசிரூபணம் செய்திருந்தனர் என்பது,

" அழல்புரை குழைகொழு நிழறரும் பலசினை
யாலமுங் கடம்பு நல்யாற்று நடுவுங்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவு
மவ்வவை மேய வேறுவேறு பெயரோ
யெவ்வயி னோயு நீயே "

(பரிபாடல், பாட்டு 4. வரி 66—70)

[சினை = மரக்கொம்பு, கொழு = தழைத்துச்செழி, கால் = காற்று, வழக்கறு = செல்ல முடியாத]

என்ற வரிகள் மூலமாகவும்,

" யங்கணேர் வானத்தணி நிலாத்திகழ் தருந்
திங்களுந் தெறுகதிர்க் கனலியு நீ
ஐந்தலை யுயரிய வணங்குடை யருந்திறன்
மைந்துடை யொருவனு மடங்கலு நீ
நலமுழுதளைஇய புகரறு காட்சிப்
புலமும பூவனு நாற்றமு நீ
வலனுய ரெழிலியு மாக விசும்பு
நிலனு நீடிய விமயமு நீ "

பரிபாடல், பாட்டு 1—வரி 41—48)

[அணங்கு=தெய்வம்; மைந்து=வலிமை; மடங்கல்=யுகமுடிவு]

என்ற வரிகள் மூலமாகவும் தெளிவாக நமக்குத் தெரிகிறது.

திருமால் வணக்கம் சங்க காலத்தே நெடுவழக்கிலிருந்ததென்பது, மணிமேகலைச் சமயக் கணக்கர் தம்திறங்கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்படுவதிலிருந்து நன்கு அறியலாம்.

"காதல்கொண்டு கடல்வணன் புராணம்
ஓதினன்" "நாரணன் காப்பு என்றுரைத்தனன்"
(மணிமேகலை —27—வரி 98—99)

இது சாத்தனர் என்ற சமணமதப் புலவரால் கூறப்படுவது. விஷ்ணு புராணம் போன்ற திருமாலைப் பற்றிய புராணங்கள் சங்க காலத்தே பெருவழக்கிலிருந்தது என்பது இதனல் தெரியவரும்.

சங்க காலத்தில் திருமால் சமயம் பற்றிக் கூறப்புகின் விரியுமென அஞ்சி விடுத்து மேற்செல்வோம்.

திருமால் அவதாரங்களில் தமிழ் மக்கள் மிகுதியாக ஈடுபட்டு, திருமால் வணக்கம் சிறப்புற நடக்க, கோயில்கள் திருமாலடியார்களால் நாடெங்கும் கட்டப்பெற்றன. அவ்வாறு கட்டியபொழுது தென் பாண்டி நாட்டிலும் கோயில்கள் வானளாவி எழுந்தன. அக்கோயில்களில் ஆன்ற புகழ் படைத்தது, திருமாலிருஞ்சோலைமலை என்பது.

"சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர் மொழி மாலிருங் குன்றந்
தாம்வீழ் காமம் வித்துபு விளக்கு
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையிவ் வையிருங் குன்றத்து"

(பரிபாடல், பா 15, வரி 22—26)

[நன்கனம்=நன்ருக; படி=பூமி]

என்ற பாடலால் நன்கு அறியலாம்.

## 2. தென் பாண்டி நாடும், திருநெல்வேலிச் சீமையும்.

அக்காலத்தில் வைணவ சமயம் தவிர, சைவம், பௌத்தம், சமணம் முதலிய சமயங்களும் நம் தென் பாண்டி நாட்டில் சீரும் சிறப்பும் பெற்று நன்னிலையிலே இருந்தன. வைணவ சமயக் கோயில்கள் பல தென் பாண்டி நாட்டில் இருந்த போதிலும், தலைநகராகிய மதுரையை அடுத்த திருமாலிருஞ்சோலை மலையே இலக்கியங்களில் பயிலப் படுவதாய் அறிகிறோம், தலை நகரத்தின் அண்மை ஒன்றே இதற்குக் காரணமாயிருக் கக்கூடும்.

அக்காலத்தில் சேரநாடு பன்னிரு சிறு நாடு களாக பிரிந்திருந்தது போல், தென் பாண்டி நாட்டில் திருநெல்வேலிச் சீமை பாண்டியர்களால் பல சிறு நாடு களாக பிரிக்கப்பட்டிருந்தது, அவையாவன :—
1) தென் ஆரிய நாடு, 2) வட வாரிய நாடு, 3)முள்ளி நாடு, 4) மேல வேம்பு நாடு, 5) கீழ வேம்பு நாடு, 6) வல்ல நாடு, 7) வழுதி வள நாடு, 8) மா நாடு, 9) கருங்குள வள நாடு, 10) கன்னிப்புறத்தாய நாடு, 11) நாஞ்சில் நாடு, 12) கல்லக நாடு, 13) வான நாடு, 14) வைகுண்ட வளநாடு என்பன. இந்நூலில் திருநெல் வேலிச் சீமையையே தென்பாண்டி நாடாக நாம் அழைக்கிறோம்.

## 3. தென்பாண்டி நாட்டின் வளம்.

தென் பாண்டி நாடு நானிலமதனின் நயம் பல மலிந்து விளங்குவது. மேற்கே சந்தனப் பொதிகைத் தடவரையும், அதனையடுத்து மரங்களும் செடி கொடி களும் செறிந்த காடும், காடு சார்ந்த இடமும், அப்பொதி கையினின்று இழிந்து, காடுகளினூடே ஒல்கி நடந்து, நாட்டை வளமுறச் செய்யும் தண் பொருனையாறும், ஆறு சார்ந்த இடமும், தண் பொருனை, "தன் மகிழ் கிழவனைகந் தழீஇக்கொடு கலந்த தன்றே" என்றபடி, ஆறு சேர் கடலும், கடல் சார்ந்த இடமும், இத்தென் பாண்டி நாட்டிற்கு நானிலத்தின் பயன்களை நல்கியது என்று சொன்னால் மிகையாகுமோ?

## 4. பொதிகை மலைச் சிறப்பு.

இத்தகைய சிறப்புக்கள் இத்தென் பாண்டி நாடு அடைவதற்கு மூலமாயிருப்பது சந்தனப் பொதிகை தடவரை என்பது அறிஞர் கண்ட உண்மை. இம்மலை பல தொடர்களால் ஆகி பலவித மூலிகை களையும் மற்றும் சந்தனம், தேக்கு, வேங்கை, தென்னை, கமுகு பலா, மா என்ற பல வகை மரங்களையும், மற்றும் பல புஷ்ப மரங்களையும், செடிகளையும், கொடிகளையும் தாங்கி பள்ளத்தாக்குகளில் தாழைகளையும், சரிவுகளில், ஏலம், கிராம்புச் செடிகளையும் கொண்டு, வானுர ஓங்கி நிமிர்ந்து நிற்கின்றது. இத்தகைய மலையிலிருந்து எழும் தென்றற் காற்று,

"கோதை மாதவி கொழுங்கொடி யெடுப்பக்
காவுங் கானமுங் கடிமல ரேந்தத்
தென்னவன் பொதியிற் தென்றல்"
(சிலப்பதிகாரம், 14—113—115)

என்றபடி நறிய மலர்களால் நறுமணம் மிகுந்து, உடலிற்கு இன்பத்தையும், உள்ளத்திற்கு மகிழ்ச்சி

யையும் அளிக்கிறது. பொதிகையின், சந்தன மரச் செறிவையும், வளமையையும், —''சோறடுவார்

ஆரத்தால் தீ மூட்டும் அம்பொதி..........."

(முத்தொள்ளாயிரம்—88)

என்ற தொடரால் நன்கு அறியலாம். சமையல் செய்வோர் சந்தனக் கட்டை வைத்து எரிக்கிறார்கள் என்றால், சந்தன மரங்களின் செழிப்பும், எளிதில் கிடைக்கும் தன்மையும், புலனாகிறது அல்லவா?

ஆகவே மரச்செறிவும், மணவீச்சும் உடைய மலை பொதிகை. அப்பொதிகையின் உச்சியிலிருந்து பொருனை ஆறு அருவியாக வீழ்ந்து, அடர்ந்த காடுகளினூடே பதுங்கிச் சென்று, காட்டை வளஞ்செய்கிறது. இம்மலையில் பலவகை மரங்கள் அடர்ந்த காடுகள் இருப்பதனாலே இங்கு பிறை போன்ற வடிவத்தையும், இரும்பு போன்ற வலிமையையும் உடைய கொம்புகளையும், கொடுமையான கண்களையும் உடைய பன்றிகளும், புலிகளும் நிறைந்து காணப்படுகின்றன. தவிரவும் பெரிய பெரிய தேன் கூடுகள் மலைகளின் உச்சிகளிலே இருந்து பள்ளத்தாக்குகளிலே தொங்கவும், அவைகளை சேகரிக்கச்செல்லும், தேர்ச்சிபெற்ற குறவர்கள் அம்மலைகளின் நிமிர்ந்த சிகரங்களைப் பார்த்து மலைத்து நிற்கும் படியானது பொதிகை மலை, என்பது

"வருபுனலிழிதரு மரம்பயி லிறும்பிற்
பிறையுறழ் மருப்பிற் கருங்கட் பன்றிக்
குறையார் கொடுவரி குழுமுஞ்சார
லறையுறு தீந்தேன் குறவ ரறுப்ப
முயலுநர் முற்றா வேற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில்"

[மருப்பு=கொம்பு; கொடுவரி=புலி; சிமை=சிகரம்.]

(அகநானூறு, பாடல் 322—வரி—9—14)

என்ற அடிகளால் தெரியவரும்.

மற்றும் இம்மலையில் உள்ள மூங்கிற் காடுகளில் கரிய மேகங்கள் போன்ற களிறுகளோடே, திரியும் பிடிகளையும், போதகங்களையும் காணலாம்.

இந்த மலையில் மான்களும், மிளாக்களும் நீர் நிலைகளுக்குச் சென்று தண்ணீர் குடிக்கும் காட்சி மனதை அள்ளுவதாக இருக்கும். மற்றும் ஓநாய்களும் நரிகளும் காடுகளினூடே ஓடித்திரியும். வானரங்களும் மந்திகளும் பழங்களைத் தின்று கொக்கரிக்கும். மந்திகள் தன் வயிற்றில், வான்கவிகள் இறுகக்கட்டிக்கொண்டிருக்க, மரங்களுக்கு மரம் தாவி விளையாடும். இவ்வாறு வன விலங்குகள் மிக்கது பொதிகை மலை,

இத்தகைய வன விலங்குகளினாலும், ஓங்கி உயர்ந்த மரங்களினாலும், பெருமை பெற்ற நெடிய சிகரங்களை உடைய மலை, கிழக்கு மேற்காகச் செல்லும் மேகங்களை இறுகப் பிணிக்கும் காரணத்தால் இடைவிடாது பெய்யும் மழை மாண்பினையும் உடைத்து.

மலைச் சிறப்பும், ஆற்றுச் சிறப்பும் மட்டுமே அன்றி, இம்மலை பல முனிவர்களுக்கும் வாழிடமாக இருந்து வந்திருக்கிறது. இம்மலையில்த்தான், அகத்தியர், பிருகு, மார்க்கண்டேயர் முதலிய பிரும்ம ரிஷிகள் பகவானை துதித்துக்கொண்டே இருக்கின்றனர் என்பது மரபு. "கல்வி கேள்விகளால் எல்லாப் பொருளையும் மறுவற உணர்ந்த பெரியோர்கள், பொதியில் இமயம், புகாரென்னும் இம்மூன்றும் ஒரு தன்மைய வாதலான், ஆதியில் தோன்றி, சலிப்பின்றி நிலைபெற்றன வென்று கூறினல்லது, அவற்றிற்கு அந்த முண்டென்று கூறார்; அவற்றில் உயர்ந்தோர் உண்டாகலான். உயர்ந்தோர் என்றது அகத்தியனும், இருடிகளும் பழங்குடியினரு மென்றுமாம்" என்று அடியார்க்கு நல்லார் கூறுகின்றார். எனவே,

" ஆங்கு
பொதியிலாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே "

(சிலப்பதிகாரம்—1—அடி. 13—19)

என்ற இந்த சிலப்பதிகார அடிகளால் இம்மலை முனிவர்களுக்கு வாழிடமாக இருந்ததை நன்கு அறியலாம்.

## 5. தென் பாண்டி நாட்டின் நாகரிகம்.

தென் பாண்டி நாடு, பண்டைக் காலத்தில் இயற்கை வனப்பிலும், தெய்வீக அருள் பெற்ற முனிவர்கள் வாழ்விலும், தெய்வத்தினிடம் அசையாத அன்பு செலுத்திய அடியார்கள் அருள் வழியிலும், இப்பூவுலகுக்கே ஓர் திலகமாய் திகழ்ந்தது என்று கண்டோம். இந்நாட்டு மக்கள் நாகரிகம் படைத்தவர்களாகவும், பெரிய பட்டணங்களைக் கட்டிக்கொண்டு வாழ்ந்தனர் என்றும், இவர்கள் தங்கள் தெய்வங்களை தாங்கள் உகந்த உருவத்திலேயே வடித்து அவைகளுக்கு பெரிய கோயில், கோபுரம், திருமதிள் முதலியவை கட்டி வணங்கி வந்தனர் என்பதையும், பண்டைத் தமிழ் ஏடுகள் பறை சாற்றுகின்றன.

இத்தென் பாண்டி நாட்டிலேதான் கொற்கை என்ற ஓர் மாபெரும் பட்டினம் முன்னை நாளில் சீரும் சிறப்பும் பெற்று, அயல் நாட்டார் புகழும் தன்மையில் விளங்கியது. அங்கு முத்துக் குளிப்பது ஓர் தொழிலாகவே இருந்தது. மேல் நாடுகளிலிருந்தும், கீழ் நாடுகளிலிருந்தும், பலர் அங்கு வந்து விலையுயர்ந்த வெண் முத்துக்களை வாங்கிச் செல்லுவது வழக்கம். ஆகவே,

"நத்தின் இளஞ்சினையும், புன்னைக்குவி மொட்டும்
பந்தர் இளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ் முத்தம் போல்த் தோன்றும் செம்மற்றே, தென்னன்
நகைமுத்த வெண்குடையான் நாடு."

(முத்தொள்ளாயிரம்—பாடல் 7)

[செம்மற்றே = தனிப்பெருமை வாய்ந்தது]

என்ற பாடலால், தென் பாண்டி நாட்டு முத்துச் சிறப்பும், அதைப் புலவர்கள் புகழும் தன்மையையும்.

"பேருலகத்து மேஎந்தோன்றிச்
சீருடைய விழுச் சிறப்பின்
விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை யிருஞ் சேரிக்
கட்கொண்டிக் குடிப் பாக்கத்து
நற்கொற்கை......"

(மதுரைக்காஞ்சி—133—138)

[பேருலகத்து = பெரிய நன் மக்களிடத்து; உலகம் உயர்ந்தோர் மாட்டாகலான்; கட்கொண்டி = கள்ளை உணவாக உடைய.]

என்ற அடிகளால் கொற்கைப் பட்டினத்தின் புகழ்ச் சிறப்பினையும், முத்தினையும், சங்கினையும் உடைய சேரிச் சிறப்பினையும், சுற்றிலும் சீறூர்களையுடைய சிறப்பினையும், அறியலாம்.

இது கடற்கரைப் பட்டினமாக இருந்து, அயல் நாட்டாருடன் தொடர்பு கொண்டிருந்தமையாலும், சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட நெடுஞ்செழியன் என்ற பேரரசன் கண்ணகி இடத்திலே நீதிவழுவி இறந்தபின், கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன் மதுரையிலே அரசு கட்டிலேறியமையாலும், கொற்கையிலிருந்து அகப்பட்டு சென்னை பொருட்காட்சி சாலையில் உள்ள புதை பொருள்களாலும், இப்பொழுது சிற்றூராக இருந்தும், பெரிய பட்டினமாக முன்னை நாளில் இருந்தது என்று தெரிய வருகிறது. மற்றும் பக்கத்திலுள்ள "அக்கா

சாலை மணப்படை, கொட்டாரம் முதலிய இன்றைய ஊர்களும், கொற்கையின் புறநகராயிருந்த புராதனச் சிறப்புக்கு சாட்சியம் கூறுகின்றன.

இவ்வாறு பட்டினங்களைப் போலவே கோயில்களும் தமிழ் மக்களால் பழங்காலம் தொட்டே கட்டப்பெற்று மக்களின் மனத்தை ஒருமைப் படுத்திய சக வாழ்வுக்கு உரிய சாதனங்களாக விளங்கின. இக்கோயில்கள் தெய்வங்களுக்கும், அரசர்களுக்கும், அடியார்களுக்கும் கட்டும்பொழுது, நன்னாள் பார்த்து, நல்ல நாழிகையிலே, சிற்ப நூலை அறிந்த தச்சர், கூரிதாக நூலை நேரே பிடித்து, திசைகளைக் குறித்துக்கொண்டு, அத்திக்குகளில் உள்ள தெய்வங்களையும் ஆராதித்து, நிர்மாணிக்கப்பெற்றன. இவற்றைக்குறித்து,

"............மாதிரம்
விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்
பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கி"

(நெடுநல் வாடை, வரி 72—77)

[மாதிரம் = திசை; வியல்வாய் = அகன்றயிடம்; மண்டிலம் = ஞாயிறு; ஏர்பு = சேர்வதற்கு எழுந்து; தேஎம் = திசை]

என்ற நெடுநல் வாடை அடிகளால் அறிவோம். வேத வேதியர்களும், பெருங்கணிகரும், சிறப்புடைய கம்மியர் (தச்சர்)களும் சென்று, "மேலோர் விழையும் நூல்நெறி மாக்கள் பால்பெற வகுத்த, பத்தினிக் கோட்டம்" என்ற சிலப்பதிகார அடிகளால், கோயில் அமைத்ததை அறிகிறோம், அந்தக் காலத்து தமிழ் மக்கள் கோயில் வகுப்பதில் கொண்ட சிரத்தையும், அவர்களுடைய சிறந்த பண்பாடும் இவையால் வெளியாகின்றன. அதோடு அக்காலத்தில் கோயில்கள், கோபுரங்கள், புறமதிள்கள் முதலியவை செங்கல்லாற் செய்யப்பட்டு

இருந்தன என்பதை, ''சுடுமண்ணேங்கிய நெடுநிலைக் கோட்டமும்'' ''சுடுமண்ணேங்கிய நெடுநிலை மனை தொறும் என்ற மணிமேகலை அடிகளும், சுடுமண்ணேங்கிய நெடுநிலை வரைப்பின்'' என்ற பெரும் பாணாற்றுப்படை அடியும், நன்கு விளக்கும்.

அக்காலத்தில் மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், அவற்றைச் சுற்றி மதிள்களும் வானளாவக் கட்டப்பெற்றிருந்தன என்பதை, ''விண்பொர நிவந்த வேயா மாடம்'' என்ற மணிமேகலை அடியும்,'' மழையாடு மலையினிவந்த மாடமொடு'' என்ற மதுரைக் காஞ்சி அடியும், ''குன்று குயின்றன்ன ஓங்கு நிலைவாயில்'' என்ற நெடுநல் வாடை அடியும், ''உயர்ந்தோங்கிய நிறைப்புதவி, நெடுமதில்'' ''விண்ணுறவோங்கிய பல்படைப்புரிசை'' என்ற மதுரைக் காஞ்சி அடிகளும், நமக்கு நினைப் பூட்டுகின்றன.

தவிரவும் இக்கோயில்களின் சுவர்கள் சுண்ணாம்பால் பூசப்பட்டவை. அவைகளில் கடவுளர் வடிவங்கள் தீட்டப்பெற்றிருந்தன, ''வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய கண்கவர் ஓவியம்'' என்ற மணிமேகலை அடிகள், சுண்ணாம்பு பூசப்பட்டு சித்திரங்கள் வரையப்பட்டிருந்ததை அறிவிக்கின்றன.

மேலும் அக்காலத்தில் கடவுளை உருவாக்கிய தமிழர் தங்கள் கோயில்களையும்,, கோபுரங்களையும், மதில்களையும் எப்படி சுடு மண்ணால் கட்டினார்களோ அதே போல கடவுளையும்,

**''மண்ணினும், கல்லினும், மரத்தினும், சுவரினும்,**
**கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க''**

என்ற மணிமேகலை அடிகளால் வகுத்திருந்தனர், என்று தெரிய வருகிறது.

திருமால் கோயில்களில் வழிபாடுகள் வைணவாசம முறைகளான பாஞ்சராத்ர, வைகானஸப்படி அமைந்திருந்தன என்பது,

" மலைமிசை நின்றேன்.........புள்ளணி நீள்கொடி
புணர் நிலை தோன்றும் "

(சிலப்பதிகாரம் 11—136)

செங்கட்காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை செங்கண் மாஅல்

(பரிபாடல், 3—81—82)

என்ற அடிகளால் கருடக்கொடி மரமும், சங்கருடண, வாசுதேவ, பிரத்யும்ந, அநிருத்தர்களென்னும் வியூகாவதார மூர்த்திகளும் சங்கச் செய்யுள்களில் காணப்படுதலான், அவ்வாகம வழியே கோயில்களும், கொள்கைகளும் அமைந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது.

## 6. தென் பாண்டி நாட்டில் இன்றைய மன்னார்கோவில்.

மேற்கண்டவற்றிலிருந்து பண்டைத் தென் பாண்டி நாட்டின் கலைச்சிறப்பும், பண்டைத் தமிழனின் பண்பாடும், தெய்வவழிபாடும், பகவானை, ''நிலம்தரு திருவின் நெடியோன்'' என்று கற்பித்த திறமையும் நன்கு புலனாகும். இன்னனைய பேறுகள் பெற்ற சந்தனப்பொதிகைத் தடவரையும், செந்தமிழ் முனிவனும், மக்கள் மாட்சியும், விளங்கும் தென் பாண்டி நாட்டின் பல குறு நாடுகளில், பொதிகை மலைச்சாரலில் உள்ள ஓர் முக்கிய நாடுதான், முள்ளி நாடு என்று முன்னோரால் அழைக்கப்பட்டது. அம்முள்ளி நாட்டிலே நடு நாயகமாய் விளங்கிய அக்காலத்திய பெரிய பட்டணம்தான், பிரம்மதேயம், இன்றைய திருநெல்வேலி மாவட்டத்தில், அம்பாசமுத்திரம் வட்டாரத்தில், உள்ள பிரும்மதேயம் என்ற ஊரும், அதைச்சுற்றி நாலைந்துமைலும். இந்த பிரும்மதேயத்திற்கு இருமருங்கும், இருஆறுகள், தன்

பொருனையும், கருணையும் அழகாகச் செல்லுகின்றன. கருணையாறு, இந்த பிரும்மதேயத்திலிருந்து நான்கு மைல் தூரத்தில். அத்தியாழநல்லூருக்கு வட பக்கம், பொருனையாறோடு கலக்கிறது. இவ்விரு ஆறுகளுக்கும் நடுவே, இன்றைய பிரும்மதேயத்திற்கு மேற்கே, ஆனால் சேர்ந்தார்ப் போலவே மன்னார்கோவில் என்ற பழம் பெரும் திருப்பதி இருக்கிறது.

## 7. மன்னார்கோவிலின் புராதனப் பெருமை.

**மாநிலஞ் சேவடியாகத், தூநீர்**
**வளைநரல் பௌவ முடுக்கையாக**
**விசும்பு மெய்யாகத், திசை கையாகப்,**
**பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக,**
**இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய**
**வேத முதல்வ னென்ப**
**தீதற விளங்கிய திகிரி யோனே,**

(நற்றிணை—திருமால் வாழ்த்து)

இம் மன்னார்கோவில் என்ற தலத்தைப்பற்றி ஆராய இவ்வூர்க்கோயில் கல்வெட்டுக்கள் நமக்கு முக்கிய ஆதாரமாக இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களெல்லாம் நமக்குப் பதினோராவது நூற்றாண்டிலிருந்துதான் இருக்கின்றன. அவைகள் ஓரளவுக்கு இவ்வூர்ப் பழம் பெருமைகளை எடுத்துச் சொல்லத்தான் செய்கின்றன. ஆயினும் பதினோராம் நூற்றாண்டுக்கு முன், அவ்வூர் வளர்ச்சியையும், அங்கு கோயில் ஏற்பட்ட வரலாற்றையும், தெரிந்துகொள்வதற்குத் தென் பாண்டி நாட்டின் கலைமேம்பாடும், நாகரிகமும், தெய்வ பக்தியுமே சான்றுகளாகவுள்ளன.

அக்காலத்தில் இவ்வூர், முள்ளி நாட்டிலே, பிரும் மதேயத்திலே, வேதநாராயணபுரம் அல்லது வேதபுரி என்ற பகுதிஎன அழைக்கப்பட்டது, என்று இப்பொழுதும் இந்த ஊரார் சொல்லிக்கொள்கின்றனர். இது கர்ண பரம்பரைச் செய்தி; புராணமும் அப்படியே

தான் கூறுகிறது. இவ்வூருக்கு மேற்கே பொதிகை மலைத்தொடர்; இருபக்கமும் பொருநையும், கருணையும் ஆறுகள்; கிழக்கே இரு ஆறுகளும் சேரும் சங்கமுகம்; ஆக விரிந்த பிரும்மதேயம். இவ்வூர் பொதிகை மலையின் அடிவாரத்தில் இருந்தமையின் இதைச்சுற்றி மரம், செடி, கொடிகள் அடர்ந்த பெருங்காடு இருந்தது. இவ்வூர் பெரும் பட்டணமாக இருந்தமையின் மக்கள் தங்கள் நாகரிகத்திற்கு ஏற்ப, சுற்றிலும் நீர்நிலைகளை அமைத்துப் பயிர்த் தொழிலை மேற்கொண்டிருந்தனர். பாபனாசத்தில் பொருநையாற்றிலே முதற் கால்வாய் மன்னார்கோவில்க் கால்தான் என்று சொன்னால், இப்பெரும் பிரும்மதேயத்தின் பழமையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இந்த பிரும்மதேயத்தின் வளர்ச்சியை நோக்கும் பொழுது இது தென் பாண்டி நாட்டின் நாகரிகத்தோடு ஒத்திருந்தது என்று தெரிய வருகிறது. பல குடி மக்களும் இப்பட்டணத்தில் வாழ்ந்தனர், இவ்வூர்ப் புறநகரில் பல தொழிலாளர்களும் வசித்து வந்தனர். அப்புறநகர் இப்பொழுது வாகைக்குளம் என்று வழங்கப்படுகிறது. இவை கல்வெட்டுக்களில் இருந்து தெரிய வருகிறது. இவர்களெல்லோரும் கோவிற்கன்மிகளாக இருந்தனர்.

இக்கோயிலும் பழந்தமிழ் நாட்டுக் கோயிலாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. பிரபந்நாமிர்தம் என்ற நூலிலே இராமானுஜர் காலத்திய ஆந்திர பூர்ணர் என்ற ஆந்திரர் வம்சத்தில் வந்த அனந்தார்யா என்ற பெரியார், "குலசேகராழ்வார் வேதநாராயணபுரத்திலே எழுந்தருளி பெருமாளுடைய கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்து அறுபத்தேழாவது திரு நக்ஷத்திரத்தில் ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளை யடைந்தார்" என்று எழுதியிருக்கிறார், ஆகவே குலசேகராழ்வார் இவ்வூரிலே பெருமான் திருவடிகளை அடைந்தார் என்றால் அதற்கு முன் இப்பெரும் பட்டணத்திலே ஓர்

திருமால் கோட்டம் இருந்தது என்றும், அது ஓர் சிறந்த திருப்பதியாகத் திகழ்ந்தது என்றும் தெரிய வருகிறது.

சங்க காலத்திலும் அதற்கு முன்னும் வைணவ சமயம் இருந்த உன்னத நிலையை மேலே கண்டோம். ஆகவே பெரும் பட்டணங்களின் அகநகரில் திருமால் கோட்டம் ஓர் அங்கம் என்று தெரிகிறது. அவ்வாறு நாம் நோக்குமிடத்து இவ்வூரிலும் ஓர் பெரிய கோயில் இருந்திருக்கவேண்டும் என்று நினைக்க இடமுண்டு. ஆகவே இக்கோயில் பழங்கால முறைப்படி செங்கல் சுண்ணும்பினல் கட்டப்பட்டதாக இருந்திருக்க வேண்டு மென்று ஊகிக்கலாம். இதற்குப் பெயர் அக்காலத்தில் மண்ணளி என்று சொல்லுவது வழக்கம். இப்பொழுதும் இக்கோயிலின் மூலவர் சந்நிதி கட்டை வேய்ந்து செங்கல் சுண்ணும்பினல் கட்டப்பட்டது என்பதை யாவரும் காணலாம், 1905ம் வருஷத்திய, கல்வெட்டு ரிகார்டு நம்பர் 112ப்படி, இக்கோயில், சேரஅரசன் இராஜசிம்மன் காலத்தில் கற்றளி கட்டுவது வழக்கமாய் விட்டது என்றும், அக்காலத்திற்கேற்ப இராஜசிம்மன் மண்ணளியாக இருந்த கோயிலை, கற்றளியாகக் கட்டினன் என்பதுந்தான். ஆயினும் உள்கோயிலின் மதிலைத்தான் கல்லினல் கட்டினனே தவிர கூரை இன்னும் புராதனச் சிறப்போடேயே இருக்கிறது என்பது அறிஞர் கவனிக்கத்தக்கது.

தவிரவும், கோயில் உள் மண்டபத்து (கர்ப்பக் கிரகத்து)ச் சுவரில் சுண்ணும்பு பூசப்பட்டு, தென் சுவரில் பிரும்மாவின் உருவும். நடுவில் வேதநாராயணன் உருவும், வட பக்கத்தில் சிவனின் உருவும் சித்திரமாக வரையப்பட்டு, வேதநாராயணன், ஸர்வேஸ்வரனுக காட்சி அளிப்பதாகக் காட்டி இருக்கின்றனர், இங்கு, "வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய கண்கவர்

ஓவியம்'' என்ற மணிமேகலை அடிகள் நினைவு கூறத் தக்கது. இது, இக்கோயில் சங்க காலத்தது என்பதை நினைவூட்டும்.

இக்கோயில் கல்வெட்டுக்களிலிருந்து, திருவாய்க்குலத்துப் பிள்ளை கோயில் (கண்ணன்) ஒன்று இவ்வூரில் இருந்தது என்று தெரிகிறது. ஆனால் அக்கோயில் இப்பொழுது இல்லை, ஓர் உடைந்த ஸ்ரீ வேணுகோபாலன் கற்சிலையும் ஸ்ரீ ருக்மணி தேவியாரின் கழுத்துப் போன கற்சிலையின் உடல் பாகமும் மட்டும் இப்பொழுது கிடைத்துள்ளன. கோயிலினுள்ளே நவநீத கிருஷ்ணன் விக்ரகம் மட்டும் இருக்கிறது. இந்த திருவாய்க்குலத்துப் பிள்ளை கோயில் சங்க காலத்திலேயே காடும் காடு சார்ந்த இடமாகையாலே வேதநாராயணன் கோயிலோடு இருந்திருக்கவேண்டுமென்று ஊகிக்கலாம்.

இப் பழங்கோயில், பண்டைக் காலத்து முறைப்படி, கர்ப்பக்கிரகம், அந்தராளமண்டபம், முகமண்டபம் என்ற மூன்று அங்கங்களோடும், சுற்றுத் திருமதில் கோபுரங்களோடும், ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஏனெனில் அந்தராள மண்டபத்திற்குப் பிறகு உள்ள குலசேகர மண்டபம் அத்துடன் இணைக்கப்பட்டிருப்பதை இப்பொழுதும் காணலாம்.

அடுத்தபடியாக இது ஓர் வைகானஸக் கோயில். பிற்காலத்தில் ஐந்து அங்கங்களுடைய கோயில்கள் அமைந்தபொழுது விமானமும், கொடிமரமும் இக்கோயிலில் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். இது தென்பாண்டி நாட்டு மலை மண்டலத்தில் உள்ள கோயில் ஆகையால், இது சேரர்களுடைய ஆதிக்கத்தில் இருந்துவந்த காலத்தில், நம்பூதிரிகள் பூஜைசெய்துகொண்டுவந்தனர். பின்னர் சேர அரசர்களுக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கம் குறைந்தவுடன் இந்த வைகானஸ பட்டர்கள் பூஜையை ஏற்று நடத்தி வந்தனர்.

இவ்வூரில் பிரும்மவித்துக்கள் பெருமளவில் இருந்தனர் என்று கல்வெட்டுக்களில் இருந்து தெரிகிறது. மாதந்தோறும் சதயநக்ஷத்திரத்தன்று பன்னிருபிரும்ம வித்துவான்களுக்கு அமுதுண்ண காலிங்கராயன் என்ற அதிகாரி இரண்டுவேலி நிலமும், அவற்ருல்வந்த கடமையும் தந்துள்ளான்'' என்று இவ்வூர்க் கல்வெட்டில் உள்ளது. ('சிந்தனைப்' பத்திரிகை ''பழையபட்டணம்'' என்ற தலைப்பு, நவம்பர். 1947 - மலர் 1 இதழ் 2ல் பக்கம் 36ல் ஸ்ரீ ரா. திருமலை. கன்னியாகுமரி ஜில்லா கலெக்டர் அவர்கள் எழுதியது) இக்கல்வெட்டுக் காலத்தில் இருந்த பிரும்மவித்துவான்களில் செண்டலங்கார மகா முனியும், ஆழ்வார் பராங்குச மகாமுனியும் பெரும் சிரமப்பட்டு, சிறந்த தொண்டு, இக்கோயிலுக்குச் செய்தவர்களாவர். ஆகவே இவ்வூர், புராணம் கூறும் பிருகு, மார்க்கண்டேய மகாமுனிகள் காலத்திலிருந்து, வேதம் வல்ல பிரும்மவித்துவான்கள்நிறைந்த ஊராக இருந்திருக்கவேண்டுமென்று நாம் ஊகித்தால் தவருகாது என்று நான் கருதுகிறேன். பிரும்ம வித்துவான்கள் நிறைந்த ஊராகையாலும், பிரும்ம வித்துவான்களுக்கு பாண்டிய அரசர்களால் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊராகையாலும் பிரும்ம தேயம் என்று இவ்வூர் அழைக்கப்படுகிறது. சுமார் எண்பது வருடங்களுக்கு முன்னால் இந்த பிரும்மதேயம் என்ற ஊரே தாலூகாவின் தலை நகரமாக இருந்தது. அதற்குப் பின்னர்தான் தாலூகாவின் தலைநகர், அம்பாசமுத்திரத்திற்கு மாற்றப்பட்டது.

இவற்ருல் மன்ஞர்கோவிலின் பழமையும், கோயிலின் தொன்மையும், அறிஞர்க்கு நன்கு புலனுகும்.

## 8. குலசேகராழ்வார் பற்றிய ஆராய்ச்சி.

இந்தத் தொல்புகழ் திருமால் கோயிலில், குலசேகராழ்வார் தன் அந்திம காலத்தில், சக்கரவர்த்தித் திருமகனுக்கு திருவிழாக்களெல்லாம் கொண்டாடிய

தாகப் பிரபந்நாமிருதம் என்ற நூல் கூறுகிறது. இங்கு குலசேகரரிழ்வாருக்கு என்று ஓர் தனிக்கோயில் இருக்கிறது. அவருக்கு இவ்வூரார் பிரம்மோர்ச்சவங்கள் ளெல்லாம் செய்து திருவிழாக்கொண்டாடி இருக்கின்றனர். ஆகவே நாம் இங்கு குலசேகராழ்வாரைப்பற்றி ஆராய்ச்சி செய்வது அவசியமாகிறது.

இவற்றைப்பற்றிய கதையை புராணப் பகுதியில் படித்துக்கொள்ளலாம். புராணப் பகுதியில், குலசேகராழ்வார் சரித்திரத்தில், ஆராய்ச்சிக்கு உரியனவற்றை மட்டும் இங்கு ஆராய்ந்து முடிவு கட்டுவோம்.

## (அ) கால ஆராய்ச்சி.

காலத்தைப்பற்றி ஆராயும் பொழுது முதலில் ஆழ்வார்களுக்கும், ஆசாரியர்களுக்கும் உண்டான வித்தியாசங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஆழ்வார்கள் பகவானுடைய குணங்களில் ஆழங்கால்பட்டவர்கள், அவதாரபுருஷர்கள், சிறந்த யோகிகளும், ஞானிகளும் ஆவர். இவர்கள்தான் தமிழ் நாட்டில் வைணவசமயத்தின் ஆணிவேர்கள். ஆசாரியர்களோ இவர்கள் வழியைப்பின்பற்றி, இவர்களின் அருளிச்செயல்களில் மூழ்கி உலகுக்கு அவைகளைப் பிரசாரம்செய்த பெரியார்கள், இத்தகைய மதப்பிரசாரகர்களான ஆசாரியர்கள் குடிவழியில் முதல்வர் ஸ்ரீமந் நாதமுனிகள் என்பது உலகரிந்த உண்மை இவருடைய காலத்தைத் தெரிந்துகொண்டுதான் மற்றவர்கள் காலத்தை நிர்ணயிக்கமுடியும்.

நமக்கு இப்பொழுது நிச்சயமாக சரித்திர ரீதியாக தெரிந்த காலம் இராமானுஜர் காலம்தான். அது கி. .பி. 1017முதல் 1137வரை என்பது சரித்திர ஆசிரியர்கள் ஒரு முகமாக ஒப்புக்கொண்ட உண்மை. இதையாரும் மறுக்கமுடியாது. இராமானுஜர்,

ஆழ்வார்கள் அருளிச்செயல்களிலும், ஆசாரியர்களில், நாதமுனிகள், யமுனைத்துறைவர் என்ற ஆளவந்தார் இருவரிடத்தும் ஈடுபட்டவர் என்பது இராமனுஜருடைய சிஷ்யராகிய கூரத்தாழ்வானின் சிஷ்யர் திருவரங்கத்தமுதனாரால், இராமானுஜர் காலத்திலேயே இயற்றப்பட்ட, ''இராமானுஜநூற்றந்தாதி'' என்ற நூலிலிருந்து தெரியவருகிறது. திருவரங்கத்தமுதனார், கூரத்தாழ்வான், இருவருடைய உறவையும்,

**''மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக் குறும்பாம்**
**குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடிய பின்''**

என்ற இராமானுஜநூற்றந்தாதி அடிகள் விளக்கும்; மற்றும் பின்பழகிய ஜீயர் குருபரம்பராப்ரபாவமும் ஆதாரம் கொடுக்கும்.

ஆசாரியர்களுடைய குடிவழியில் இராமானுஜர் ஐந்தாமவராவார். அவ்வாறாயின் ஸ்ரீமந் நாதமுனிகள் இராமானுஜருக்கு ஒரு நூற்றாண்டாவது முன்னதாக இருந்திருக்கவேண்டும். இராமானுஜர் காலத்தில் அரசாண்ட சோழமன்னன் முதல் குலோத்துங்கன். முதல் குலோத்துங்கசோழன் அவையிலிருந்தவர் கவிச் சக்கரவர்த்தி ஐயங்கொண்டார். கவிச் சக்கரவர்த்தி ஐயங்கொண்டார் காலத்தில், கவிச் சக்கரவர்த்தி கம்பன் இருந்ததாக எந்த அறிஞனும் துணிந்து கூற மாட்டன். ஆகவே கம்பன் காலம், இந்த முதல் குலோத்துங்கன் காலமும், இராமானுஜர் காலமுமாகிய பதினேருவது நூற்றுண்டிலில்லை. இந்தக் காலத்தில் எந்த ஆழ்வார்களோ அல்லது இராமானுஜர் புகழும் படியான ஆசாரியர்களில் ஸ்ரீமந் நாதமுனிகள், ஆளவந்தார் முதலியவர்களோ இல்லை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி யெனவிளங்கும். மற்றும் ஸ்ரீரங்கம் கோயில் கல்வெட்டில், ''அம்பிகை தேர்த் திருநாளிலும், பங்குனித் திருநாளிலும் தீர்த்தம் பிரஸாதித்தருளின, அன்றிரா, திருப்புன்னைக்கீழ் எழுந்தருளி

யிருந்து, "தேட்டரும் திறல்" கேட்டருளின போது" என்று குலோத்துங்க சோழன் ஆட்சி பதினெட்டாம் ஆண்டு திருவரங்கச் சாஸனம் கூறுகிறது. இது குலசேகராழ்வார் பதிகங்களில் ஒன்று. அக்காலத்தில் இப்பதிகங்கள் திருவிழாக் காலங்களில் ஓதுவது வழக்கமாக இருந்தது என்ருல் ஆழ்வார் இக்கல்வெட்டுக்கு அனேக வருடங்களுக்கு முன்னதாக இருந்திருக்கவேண்டும். இந்தப் பதிகம் ஓதுவதற்கு ஏற்பாடு செய்தவன் குலோத்துங்கனுக்கு முன் இருந்த சோழகேரள அரசனுவான். அவன் திருமங்கையாழ்வாருடைய திருநெடுந்தாண்டகம் ஓதுவதற்கு வேண்டிய நித்தநிமந்தங்கள் விட்டிருந்தான் என்று கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. இவற்றிலிருந்து, ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஒரே காலத்தவர் என்ற கோபிநாதராவ் கூற்றை அறிஞர்கள் சீர்தூக்கி உணர்வார்களாக!

ஆசாரியர்களில் நாதமுனிகள், கம்பராமாயணம் அரங்கேற்றத்திற்கு தலைமை வகித்தார், ஸ்ரீமந் நாதமுனிகள் உவக்க சடகோபரந்தாதியைக் கம்பர் பாடினர் என்று தெரியவருகிறது. இவற்றிலிருந்து கம்பருக்கும் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கும் தொடர்பு இருந்திருக்கிறது. ஸ்ரீமந் நாதமுனிகள் வெளிக்கொணர்ந்த நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் கம்பருக்கு ஊற்றம் இருந்து அதில் திளைத்திருக்கவேண்டும் என்றும் நாம் ஊகிக்கலாம். அதனுலேயே கம்பர், ஸ்ரீமந் நாதமுனிகள் நம்சடகோபனைப் பாடினயோ என்ற கேள்விக்கு, சடகோபரந்தாதியைப்பாடி இருக்கவேண்டும். கம்பருடைய பாட்டிலே ஒரு அரசனையாவது குறித்துப்பாடவில்லை. ஓர் பிரபல அரசன் இருந்திருந்தால் நிச்சயமாகப்பாடி இருப்பார்.

கம்பராமாயணத்தில், மருத்துமலைப் படலத்தில், உத்தர குருநாட்டு உவமை கூறுவான் தொடங்கி, "சென்னிநாட்டெரியல் வீரன் தியாகமாவினோதன் தெய்

வப்பொன்னி நாட்டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் போனான்'' என்ற செய்யுளில் வரும் ''வீரன் தியாகமாவினோதன்'' என்ற தொடரை வைத்து, அநபாயன் காலம் என்று சிலர் ஊகிக்கிறார்கள். ''எண்ணிய சகாப்தம்'' என்ற முழுச் செய்யுள் இருக்கும் பொழுது, ஒரு செய்யுளில் வரும் ஒருதொடரை வைத்து சிரமப்பட்டு வாதுசெய்வது அவ்வளவு நேர்மையாகக் கொள்ள முடியாது.

இந்தத் தொடரைச் சற்று ஆராய்வோம். இராமாயணமும், சடகோபரந்தாதியும் பாடிய கம்பர், வைணவர்களால், அவன் பெயரையே உச்சரிக்கக்கூசி, ''கிருமிகண்ட சோழன்'', என்று வெறுக்கப்பட்ட அநபாயனுக்கு, இந்தத் தொடரைச்சூட்டி இருக்க முடியுமா? என்று அறிஞர் சிந்தனை செய்க!

இந்தத் தொடர் மூன்றாவது நந்திவர்மனையே குறிக்கிறது. (காலம் கி. பி. 826 முதல் கி. பி 850வரை)

''வண்மையால், கல்வியால், மாபலத்தால், ஆள்வினையால்
உண்மையால். பாராள் உரிமையால்—திண்மையால்
தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானோ (டு)
யார்வேந்தர் ஏற்பார் எதிர்''

என்ற பெருந்தேவனார் பாரதவெண்பா அதற்குச் சான்று. மூன்றாவது நந்திவர்மனின் தெள்ளாற்றுப் போரை மெச்சியே ''வீரன் தியாகமாவினோதன்'', என்று பாடி இருக்கவேண்டும். அக்காலத்தில், வேறு சோழப்பேரரசர்கள் இல்லாமையாலும், மூன்றாவது நந்திவர்மன், தெள்ளாற்றில் சோழனை வென்றமையாலும், 9வது, 10வது நூற்றாண்டுகளில் திறமையான அரசர்க்கு வினோதன் என்ற அடைமொழி இருந்தமையாலும் (உதாரணம். ராஜராஜனுக்கு, நித்திய வினோதன்.) கம்பர் மூன்றாவது நந்திவர்மனின், ''தெள்ளாற்று வெற்றியைப் புகழ்ந்து வீரன் தியாகமா வினோ

தன்'' என்று பாடி இருக்கவேண்டும்.. அதுவே ''எண்ணிய சகாப்தம்'' என்ற பாடலுக்கு ஒத்ததாகும்.

ஆகவே கம்பராமாயணம் அரங்கேறிய காலம் நாதமுனிகள் இருந்திருக்கவேண்டும். ''எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழன்மேல்'' என்ற அடிப்படி வருடம் கி. பி. 885 ஆகிறது. ஸ்ரீமந் நாதமுனிகள் கம்பராமாயணம் அரங்கேறிய காலமாகிய கி. பி. 885ல் கல்வி, கேள்விகளில் தேர்ந்து வயதானவராக இருந்திருக்கவேண்டும். ஆகவே ஸ்ரீமந் நாதமுனிகள் பிறப்பை கி. பி. 825 என்று கொண்டால் நாம் தப்பிதம் செய்தவர்களாக மாட்டோம். ஸ்ரீமந் நாதமுனிகள் நீண்ட காலம் இருந்ததாக குருபரம்பரைகளிலிருந்து தெரிகிறது. பிரபந்நாமிர்தம், ஸ்ரீரங்கம் கோயிலொழுகு முதலிய நூல்களால் ஸ்ரீமந் நாதமுனிகள் கி. பி. 823ல் அவதரித்தவர் என்று தெரிகிறது. அது நம் ஆராய்ச்சி காலத்திற்கு ஒத்திருப்பதால் உறுதியாகிறது, அந்த நூல்களிலிருந்தே கி, பி. 823ல் அவதரித்த ஸ்ரீமந் நாதமுனிகள் கி. பி. 918ல் பரமபதம் அடைந்தார் என்றும் அறியலாம்.

ஸ்ரீமந் நாத முனிகள், திருவாய்மொழிப் பாசுரங்கள் பாடக் கேட்டு அதன் இனிமையிலே ஈடுபட்டு, அப்பாசுரங்களைத் தேடி ஆழ்வார்திருநகரிக்கே வந்தார், எங்கும் கிடைக்காமையால். அங்கு, ஆழ்வாரையும், பொலிந்து நின்ற பிரானையும் சேவித்து மதுர கவிகளுடைய சிஷ்யரான, ஸ்ரீ பராங்குசதாஸரையும் சேவித்து, 'இவ்விடத்திலே திருவாய்மொழியோதினவர்களுண்டோ? ஸ்ரீ கோசமுண்டோ?'' என்று கேட்டருள, அவரும் திருவாய் மொழியும் மற்றுமுள்ள திவ்யப்ரபந்தங்களும் நெடுங்காலமுண்டு, ப்ரமுஷிதமாயிற்று. இப்போது எங்களாசார்யரான மதுரகவிகள் அடியேனுக்கு, ''கண்ணிநுண் சிறுத்தாம்பு;' என்கிற திவ்யப்ரபந்தத்தை ப்ரஸாதித்தருளி, இக்கண்ணிநுண் சிறுத்

தாம்பை ஆழ்வார் திருமுன்பே, ஏகாஸநத்திலே இருந்து, ஏகாக்ர சித்தராய், ஆழ்வார் திருவடிகளை தியானித்துக் கொண்டு நியமத்துடனே பன்னீராயிரம் உரு அநுஸந்திக்க ஆழ்வார் ப்ரஸந்நராவாரென்று, அருளிச்செய்தாரென்ன, ''நாதமுனிகளும் அந்தப்ப்ரபந்தத்தைக் கேட்டு திருப்புளியாழ்வாரடியிலே, சொன்னபடி அநுஸந்திக்க, நம்மாழ்வாரும் அசரீரிவாணி சொல்லுமாப்போலே, வேண்டிய விவரம் கேட்டு, திருவாய்மொழி முதலான மற்றுமுள்ள நாலாயிரப்ரபந்தங்களையும், ப்ரஸாதித்தருளினர்'' என்று பின் பழகிய ஜீயர் குரு பரம்பரை தெரிவிக்கும்.

இதிலிருந்து வழக்கத்தில் ஓதப்பட்டுவந்த திவ்ய ப்ரபந்தம் ஆழ்வார்கள் காலத்திற்குப்பின் பல ஆண்டுகளுக்கு, விளக்க மற்று, ஸ்ரீமந் நாத முனிகள் காலத்தில் மீண்டும் விளக்கம் பெற்றது என்று தெரிகிறது. யோகத்தைப்பற்றியும், யோகிகளைப் பற்றியும், அவர்களில் ஒருவருக்கொருவர் உண்டான தொடர்பைப் பற்றியும் சிலருக்கு நம்பிக்கையில்லாமல் இருக்கலாம். இங்கு ஸ்ரீமந் நாதமுனிகளும் யோகி, நம்மாழ்வாரும் யோகி. ஒரு யோகி மற்றொரு யோகியிடமிருந்து யோகத்தின் வாயிலாகவே பல செய்திகளைத் தெரிந்துகொள்ள முடியும். ஆகவே இருவரும் ஓரே காலத்தவராக இருக்கவேண்டுமென்ற நியதியில்லை. இதை அறியாத சிலர் ஸ்ரீமந் நாதமுனிகள் காலத்தில் நம்மாழ்வார் இருந்திருக்க வேண்டும் என்று வாதிக்கலாம். அவர்களுக்கு ஒன்று கூறுவேன். நம்மாழ்வார் திருக்குருகூரில் அப்பொழுது பூத உடலோடு இருந்திருந்தால் ஸ்ரீமந் நாத முனிகள் நேராக அவரிடமேயே போய் கேட்டறிந்துகொண்டிருக்கலாம். அவ்வாறு செய்யாது மதுர கவிகள் சிஷ்யரான ஸ்ரீ பராங்குச தாஸரிடம் சென்று கேட்டதிலிருந்து, பி. ஸ்ரீ அவர்கள் 'திவ்யப்ரபந்த ஸாரத்தில், எழுதுவதான, ''நம்மாழ்வாரின் சிஷ்யராயிருந்த, மதுரகவியாழ்வாருடைய சிஷ்ய பரம்பரையிலே வந்த ஒருவரை சந்தித்து,

அவருடைய உதவியால் தமக்குக் கிடைத்த நம்மாழ்வார் பாடல்களையும், வேறு ஆழ்வார்கள் பாடிய பாடல்களையும் நாலாயிரப்ரபந்தமாகத் தொகுத்தார்”, என்று வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளட்டும். எப்படியாயினும் ஸ்ரீமந் நாதமுனிகள் நம்மாழ்வார் காலத்தில் இருக்கவில்லை. அவர் யோக மகிமையினாலேயே, யோகியை சந்தித்து வேண்டியவைகளை அறிந்துகொண்டார். இப்பொழுதும் வைணவர்களாகிய நாம், நம்மாழ்வார் உயிரோடு இருப்பதாகவே எண்ணுகிறோம். அது நிற்க.

ஆழ்வார்கள் பாடல்கள் பழக்கத்திலிருந்து வழக்கொழிய ஒரு நூறு ஆண்டுகளாவது கழிந்திருக்க வேண்டும். ஆகவே நாதமுனிகள் காலமாகிய கி. பி. 850லிருந்து நூறாண்டு தள்ள, கடைசி ஆழ்வார் கி, பி. 750ல் இருந்திருக்கவேண்டும்.

ஸ்ரீ மணவாள மாமுனிகள், “உபதேச ரத்தின மாலையில் ஆழ்வார்கள் தோற்றத்தின் அடைவுபற்றி அருளுகிறார். மற்றவர்கள் ஆழ்வார்களைப்பற்றிச் சொன்னாலும் தோற்ற அடைவாகச் சொல்லவில்லை. இப்பொழுது ஸ்ரீ மணவாள மாமுனிகள் பாடலைக் கவனிப்போம்,

**பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை**
**அய்ய னருண் மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட**
**நாதனன்பர் தாட்டூளி நற்பாணன் நற்கலியன்**
**ஈதிவர் தோற்றத்தடைவா மிங்கு.**

(உபதேச ரத்னமாலை — 4)

இந்த வெண்பாவிலிருந்து ஆழ்வார்களில் கடைசி கலியன் என்ற திருமங்கையாழ்வார் என்று அறியலாம். திருமங்கையாழ்வார் காலத்தை ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதியும் எட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியும் என்று கொள்ளுதல் ஆராய்ச்சியில் முரண்பாடின்றி

இருக்கும் (நந்திவர்மனது ஆட்சி இடைக்காலமான 744—754ல் விளங்கியவரென்று, மேலே கூறிப்போந்த திருமங்கைமன்னனை, உத்தேசம் 660ல்அவதரித்தவராகக் கொள்ளின், 84—94 வயது இவர் வாழ்ந்தவர் என்பது பெறப்படும்'' ஸ்ரீ மு. இராகவய்யங்கார் ஸ்வாமி எழுதிய ''ஆழ்வார்கள் காலநிலை'' பக்கம் 140 வரி 10—13) அரிகேசரி மாறவர்மன் அல்லது கூன் பாண்டியன் காலம் சிலர் கூறுவதுபோல் கி. பி. 640—670 அல்ல. K. A. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் போன்ற அறிஞர்கள் கூறுவதுபோல் கி. பி. 670—710வரை ஆகும், ("The Pandyan Kingdom" By K. A Nilakanta Sastri. Page 41) ஆகவே திருஞானசம்பந்தர் காலம் கி, பி. 670—686 ஆகும். (மு. இராகவய்யங்கார், ''ஆழ்வார்கள் காலநிலை'' பக்கம் 110—வரி 29) திருஞானசம்பந்தர் காலத்தில் திருமங்கை மன்னன் இருந்ததாகக்கூறும் குரு பரம்பரை வரலாறுகளும் உண்மையென விளங்கும். எப்படியாயினும் திருமங்கைமன்னன் நீண்டகாலம் இருந்தவர் என்பது அறிஞர்கள் கண்ட உண்மை. ஆகவே அடியேனுடைய கருத்து திருமங்கைமன்னன் நூறு ஆண்டுகள் இருந்திருக்கவேண்டும். அதாவது கி. பி. 754ல் வயிரமேகன் வெற்றிக்குப் பிறகு ஆறு வருடங்கள் இருந்து அட்டபுயகரப் பதிகத்தைப் பாடி விட்டு திவ்ய தேசயாத்திரை செய்துகொண்டு திருக் குறுங்குடிக்கு எழுந்தருளி அங்கு பெருமாள் திருவடிகளை அடைந்திருக்கவேண்டும். "அவர் திருமதில், திருமண் டபம் முதலியன ஸ்ரீரங்கத்தில் பெரிய பெருமாளுக்குக் கட்டி, நம்மாழ்வார் திருவாய்மொழியை வருஷா வருஷம் ஓதுவதற்கு ஏற்பாடு செய்துவிட்டு பெருமாள் திருவ டிகளை அடைந்தார்,'' என்று கோவிந்தாசார்லுவின், ''ஆழ்வார்களின் திவ்ய சரிதம்'' என்ற நூல் விளக்கும். திருமங்கையாழ்வார், நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஓத, ஸ்ரீரங்கத்தில் ஏற்பாடு செய்ய வேண்டுமென்றால், நம்மாழ்வார் ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னாவது புகழோடும், தெய்வமாகவும் வணங்கப்பெற்றிருக்க

வேண்டும். திருமங்கைமன்னன் காலம் ஏழாவது நூற்ருண்டின் பிற்பகுதியாயின், ஆருவது நூற்ருண்டின் பிற்பகுதியில் நம்மாழ்வார் இருந்திருக்க வேண்டும்.

சிலர் "பாண்டியன் ஜடிலவர்மன் வேலங்குடியென்ற ஊரை சிரீவரமங்கலமென மாற்றி மகதப் பிராமணனெருவனுக்கு தானம் கொடுத்திருக்கிருன்: அது சிரீவரமங்கை யெனமாறிய பின் ஆழ்வார் பாடியுள்ளார்" என்று வாதிக்கின்றனர்.

ஆழ்வார் அருளிச்செயலை முதலில் இவர்கள் கவனிக்கவேண்டும். ஆழ்வார், சிரீவரமங்கல நகர், சிரீவரமங்கலத்தவர், சிரீவரமங்கை என்னும் தொடர்களைக் கையாண்டிருக்கிருர். ஆழ்வார் தமிழிலே தோய்ந்தவர். சங்கத்து அகவல் காலமும், அதன் கடைசியிலும், பின்னும் உள்ள வெண்பாக்காலமும் மாறும் தறுவாயில் இருந்த நம்மாழ்வார்தான் முதலில் விருத்தமெனும் ஒண்பாவைக் கையாண்ட யோகியும், அருட்கவியும் ஆவர் என்பது அறிஞர் கொள்கை. அவருக்கு மங்கலத்தின் மரூஉமங்கை என்பதை யாரும் சொல்லிக் கொடுக்கவேண்டுமென்பதும், இல்லை, உலக வழக்கும் அவருக்கு அவசியமில்லை; அருட்கவியாதலின். சிரீவரமங்கல நகர் என்ற தொடருக்கு பொருள் என்ன என்பதை நோக்கவேண்டும். சிரீ: திரு; வரம் = அருள்; மங்கலம் = மங்கலமான ஊரோடு சேரும் ஓர் துணைச் சொல் (ராஜாக்கள் மங்கலம்; கரிசூழ்ந்தமங்கலம்; போன்றபக்கத்துஊர்களைப்போல) நகர் = பெரும் ஊர். ஆகவே திரு அருளால் மங்கலமான பெரும் ஊர் எனத் தமிழில் விரியும். இவ்வூர், "தெருள்கொள் நான்மறை வல்லவர் பலரும்" "தேறு ஞானத்தர் வேத வேள்வியரும்" "செய்த வேள்வியர் வையத் தேவர்களும்" "செந்தொழிலவர் வேத வேள்வியரும்" "தெள்ளியார் திரு நான்மறைகள் வல்லாரும்" இருந்தபேரூராகை

யால், வடமொழிவாணர் பலர் இருந்த ஊர் என்பது வெளிப்படை. இது திருவருளால் மங்கலமான பேரூ ரானமையின், வடமொழிவாணர் இதற்கு சிரீவரமங்கலம் என்று கூறுவர். இது, எட்டு ஸ்வயம்பு (தானே உற்பத்தியான) ஸ்தலங்களில் ஒன்று. அவையாவன:- 1) தோதாத்திரி (வானமாமலை) 2) ஸ்ரீ ரங்கம் 3) ஸ்ரீ முஷ்ணம் 4) திருவேங்கடம் 5) நைமிசாரண் யம் 6) சாளக்கிராமம் 7) புஷ்கரம் 8) பதரிகாஸ் ரமம். இந்த எட்டினுள் சிறந்ததென்று புராணத்திற் கூறப்படும், தோதாத்திரித் தலமாகிய வானநாட்டிலே உண்டான, பெருமை பொருந்திய, மலைபோன்ற, பெரு மானை வானமாமலை என்றே நம்மாழ்வார் பாடலில் அமைத்துள்ளார், ஜடிலவர்மனுக்கு நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்.

ஜடிலவர்மனின் தந்தை மாறவர்மன் இராஜ சிம்மன் காலத்தில், மாறன்காரி என்ற பரம வைணவன் மந்திரியாக இருந்தான். அவனே ஆனைமலையில் ஓர் ஆலயம் திருமாலுக்குக் கட்டியவனுமாவன். இவன் களக்குடி என்ற களக்காட்டு ஊரினன். இவ்வூர் சிரீவர மங்கல நகருக்கு மேற்கே ஏழு மைலில் உள்ளது. இவன் சிரீவரமங்கல நகர் என்ற திருப்பதியை நன்கு அறிந்த வனுவான். சொந்த ஊருக்கு அண்மையிலுள்ளதாலும், திருமாலடியானுகையாலும், இவ்வூர்ப்பெருமானை வழிபட்டு வந்தமையின், இவ்வூர்ப் பாடலையும் இவன் நன்கு அறிந்திருக்கவேண்டும்.

இந்த மாறன் காரி என்ற மந்திரி, மாறவர்மன் இராஜசிம்மன் இறந்த பின் அவன் மகன் ஜடிலவர்மன் நெடுஞ்சடையன் காலத்தில் மூன்று வருடங்களே இருந் தான். அவன் காலத்திலேதான் வேள்விக் குடிச் சாஸனம் இயற்றப்பட்டது. மாறன் காரி இறந்தபின், அவன் சகோதரன், மாறன் எயினன் மகன், தீரதரன் மூர்த்தி எயினன், உத்தர மந்திரி பதவி ஏற்றுன்.

ஆகவே இவனும் தன் குடும்ப வழக்கப்படி வைணவ னாகவே இருந்து, நம்மாழ்வாருடைய, சிரீவரமங்கல நகர்ப்பாடல்களை நன்கு கற்றிருக்கவேண்டும். எனவே சிரீவரமங்கலச் சாஸனத்தை ஜடிலவர்மன் நெடுஞ் சடையன் வரையும்பொழுது, இவனும் கூடவே இருந்து, அப்பொழுது (களக்குடி, திருக்குறுங்குடி, பணகுடி சூரங்குடி என்பது போல) வேலங்குடி என்று இருந்த ஊரை, ஆழ்வார் பாடல்படி சிரீவரமங்கலம் என மாற்றி அமைத்திருக்கவேணடும். சிரீவரமங்கலச் சாஸனத்தில் ஜடிலவர்மன் நெடுஞ்சடையன்,

"பராந்தகன் பரம வைஷ்ணவன் தானாகி
நின்றிலங்கு மணிநீண்முடி நிலமன்னவன்
நெடுஞ்சடையன்"

என்று போற்றப்படுகிறான். ஆகவே பரமவைணவன் தானாகிய நெடுஞ்சடையன் திருமாலடியாராகிய நம்மாழ் வார் இட்ட வைணவப் பெயரையே தன் சாஸனத்தில் பொறித்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. இவன் பரம வைஷ்ணவனாகையாலேதான் இவ்வரசனுக்கும், தீரதரன் மூர்த்தி எயினன் என்ற உத்தர மந்திரி, ஆண்டவ னுக்குப் பின் அரசன் என்ற முறையில், "சிரீவரன்" என்ற பெயரை இவ்வூரிலே வைத்து வடமொழிவாணர் கள் மத்தியில் சூட்டி இருக்கவேண்டும். இந்தச் சூழ் நிலையில், கோபிநாதராவ், முதலியோர், "சிரீவரமங்கை என மாறியபின் ஆழ்வார் பாடியிருக்கவேண்டும்" என்ற கூற்றை எவ்வாறு நீங்கள் மதிப்பிடுவீர்கள்?

அவர்களுடைய மற்றொரு வாதம், 'அவ்வூர் நாச்சியாரின் பெயர் அவ்வூருக்கு ஆயிருக்கலாம்' என்பது.

அவ்வூர் ஸ்ரீவரமங்கை நாச்சியார், பதினைந்தாம் நூற்றாண்டில், வானமாமலை மடம் ஒன்றாவது ஸ்வாமி யால், திருப்பதியிலிருந்து எழுந்தருளப் பண்ணப்பட்டு அத்தலத்தில் கோயில்கொண்டிருக்கும் தெய்வநாயகப் பெருமாளுக்குத் திருமணம்செய்து வைக்கப்பட்டவர்.

இப்பொழுதும் சிரீவரமங்கல நகர்பற்றி நன்கு அறிந்தவர்கள் தைத்திங்கள் இரண்டாவது நாளான கனுவின்போதும், ஒன்ருவது ஸ்வாமியின் அவதார தினமான கன்னிப் புனர்பூசத்தன்றும், தெய்வ நாயகனையும், சிரீவரமங்கைத் தாயாரையும், மடத்துக்கு எழுந்தருளச்செய்து, மடாதிபதி, தன் மகளுக்கும், மருமகனுக்கும், புத்தாடை, அணிகலன்கள் அணிவித்து, சீரிய போகங்களிட்டு உபசாரம் செய்வதைத் தெரிந்துகொண்டிருப்பார்கள். ஆகவே அந்த நாச்சியார் ஊர்ப் பெயராலேயே உபசாரமாக அழைக்கப்படுகிருர் என்பது வெள்ளிடை மலையென விளங்கும். இவ்வாறே பல ஊர்களில் அவ்வூர்ப் பெயரால் ஒரு நாச்சியாரும், அவ்வூர் மூலமூர்த்தியின் பெயரால் ஒரு நாச்சியாரும் அழைக்கப்படுவதை அறிஞர்கள் நோக்கத்தக்கது. (திருப்பேரை நாச்சியார், குழைக்காத நாச்சியார்; ஆதிநாத நாச்சியார், திருக்குருகூர் நாச்சியார்: வரகுணமங்கை நாச்சியார்: விஜயாஸந நாச்சியார், வைகுந்தநாச்சியார், கள்ளப்பிரான் நாச்சியார்) சில அரசர்கள் இக்கோயில்களுக்குத் திருப்பணிகள் செய்திருக்கலாம். அவர்கள் பெயர்களும் அவ்வூர்களோடு ஒத்திருக்கலாம். ஆகையால் ஆழ்வார் இவ்வரசர்களுக்குப்பின் பாடியிருக்கவேண்டும் என்பதன் உண்மையை அறிஞர்கள் பகுத்தறிய அடியேன் அவாவுகிறேன்.

இச்செய்திகளிலிருந்து கோபிநாதராவ், வெங்கோபராவ் இவர்களுடைய கூற்றை ஆராய்ந்து, அவர்களுடைய முடிவை ஒப்புக்கொள்ளமுடியுமா? என்று, நீங்கள் கூறவேண்டும்.

ஆகவே, நம் முடிவு, நம்மாழ்வார் ஆருவது நூற்ருண்டின் பிற்பகுதியில் இருந்தவர் என்பதே.

ஆழ்வார்கள் காலத்தை முதலாழ்வார்கள் இடையாழ்வார்கள், கடையாழ்வார்கள், காலம் என மூன்ருகப் பிரிக்கலாம். அவற்றில் ஸ்ரீ மணவாள மாமுனிகள் வெண்பாப்படி, ஆழ்வார்கள்,

1) பொய்கையார்
2) பூதத்தார்
3) பேயார்
4) திருமழிசைப்பிரான்

முதலாழ்வார்கள்

5) மதுரகவியார்
6) சடகோபர்
7) குலசேகரப் பெருமாள்
8) பெரியாழ்வார்
9) ஆண்டாள்

இடையாழ்வார்கள்.

10) தொண்டரடிப்பொடியார்
11) திருப்பாணாழ்வார்
12) திருமங்கைமன்னன்

கடையாழ்வார்கள்.

என்று கொள்ளலாம். எனினும் முதலாழ்வார்களில் கடைசி ஆழ்வாரான திருமழிசை ஆழ்வாரும், கடையாழ்வார்களில் முதல்வரான தொண்டரடிப்பொடியாழ்வாரும், இடைக்காலத்தில் முறையே வயதானவராகவும், இளைஞராகவும் இருந்திருக்கவேண்டும். ஆகவே திவ்ய சூரி சரிதம், ''பொய்கையார், பூதத்தார், பேயார், பக்திசாரர், தொண்டரடிப்பொடிகள், குலசேகரர், மதுரகவிகள் என்ற இவர்கள் ஆழ்வார் திருநகரியில், நம்மாழ்வாராகிய பராங்குசரை சேவித்து அவருடைய அருளிச் செயல்கள் நான்கையும் கேட்டபின், தாங்கள் செய்தருளிய பிரபந்தங்களையும் ஸ்ரீ பராங்குசரிடம், விண்ணப்பம் செய்துகொண்டு, பிறகு அனைவரும் ஸ்ரீ கோதை நாச்சியார் அருளிய இரண்டு இனிய பிரபந்தங்களையும் கேட்டு, அவளுடைய பக்தி நிலையை அறிந்து ஆனந்தம் கொண்டனர்'' (திவ்ய சூரி சரிதம், 12வது சர்க்கம், திரு. வீ. சாமி அய்யங்கார், தமிழாக்கம், ஹரிசமய திவாகர வெளியீடு) என்று கூறுதல் நம்முடைய இடைக்கால ஆழ்வார்கள் காலத்துக்கு ஒத்துவரும் என நினைக்கிறேன்.

நம்மாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார் முதலியோரது கால முற்பகுதியில் முதலாழ்வார்களது வயோதிகமாக இருந்திருக்கவேண்டும்.

நம்மாழ்வார் ஆருவது நூற்ருண்டின் பிற்பகுதியில் இருந்திருப்பின் குலசேகரரும் அந்நூற்ருண்டினர் என்றுகொள்ளத் தடையில்லை. குருபரம்பரைகளில் குலசேகராழ்வார் பராபவ வருடம் பிறந்ததாக பெரியோர்கள் எழுதிப்போந்தனர். பராபவ வருடம் கி. பி. 1906ல் வந்தது. எனவே குலசேகரர் காலத்தில் பராபவ வருடம் கி. பி. 586ல் வந்திருக்கும். அந்த வருடத்தில் குலசேகரர் அவதரித்திருக்கவேண்டும். நம்மாழ்வார் குலசேகரருக்கு மூத்தவராக தோற்றத்தடைவுகூறுதலின், பல வயதுகள் மூத்தவராக இருந்திருக்க முடியாது. ஏனெனில் மற்ற நிகழ்ச்சிகள் முரண 'ஆரம்பிக்கும். ஆகவே ஒரு வயது மூத்தவராகக்கொண்டு அவர் கி. பி. 585ல் பிறந்தவர் என்று கொள்ளுதல்தான் நன்று. பெரியாழ்வாரும் இளையவராக அடைவுகூறுதலின் ஒரு வயது குலசேகரருக்கு இளையவராகத்தான் கொள்ள முடியும்' ஏனெனில் மற்றைய நிகழ்ச்சிகள் முரணுமல் இருப்பதற்கு. எனவே பெரியாழ்வார் கி. பி. 587ல் பிறந்தவராக இருக்கவேண்டும். இவர் 85வயது இருந்தவராகையால் கி பி. 672வரை இருந்திருக்கவேண்டும். இந்த ஆழ்வாருக்கு சிஷ்யனுக இருந்த பாண்டியன் பெயர் ஸ்ரீ வல்லபதேவன் என்று குரு பரம்பரைகள் கூறுகின்றன. பாண்டியர் குடிவழியில், கடுங்கோன், வேள்விக்குடி, சின்னமனூர் சாஸனப்படி கி. பி. 590 முதல்—620வரை உண்டான ஆண்டுகளுக்கு உரியவன் என்று தெரிகிறது. ("Pandyan Kingdom" By K. A. Nilakanta Sastry பக்கம் 41) வடமொழியில் வல்லபதேவன் என்ற சொல் தமிழில் கடுங்கோன் என்று இருக்கவேண்டும். இவன் களபிரரை தமிழ் நாட்டில் இருந்து விரட்டியவன். பெரியாழ்வார் கூறும் கோநெடுமாறன் இவன் மகன், மாறவர்மன் அவனி சூளாமணியாக இருக்க

வேண்டும். இவனும் தந்தையைப்போலவே வைணவனாக இருந்து, இவன் காலத்தும் பெரியாழ்வார் இருந்திருக்கவேண்டும்.

பெரியாழ்வார் திருமகளார் ஸ்ரீ ஆண்டாளும் கி. பி. 605ல் அவதரித்து, கி. பி. 620ல் நம்மாழ்வார் ஆசிபெற்று, ஸ்ரீ அழகிய மன்னனாரை கணவனாகப் பெற்றிருக்கவேண்டும். ஏனெனில் இவள் சிறு வயதிலேயே பெருமானை அடைந்ததாக குரு பரம்பரைகள் கூறுதலின்.

முதலாழ்வார்களில் முதல்வராகிய, பொய்கையாழ்வாரும், களவழிபாடிய பொய்கையாரும் ஒருவர் என்றே அடியேன் நினைக்கிறேன் (''ஆழ்வார்கள் கால நிலை'' மு. இராகவய்யங்கார் பக்கம் 23) களவழியில், செங்கணான் கோச்சோழனின் திருக்கழுமலப்போரைப் புகழ்ந்து, தன் நண்பனும், தன் நாட்டு அரசனுமாகிய சேரமான்கணைக்காலிரும்பொறையை விடுவிப்பதற்காகப் பாடினார். ஆகவே இவர் கோச்செங்கணான் காலத்தவர் என்பதற்குத் தடையில்லை. பொய்கையாரைப்பற்றி யாப்பருங்கல விருத்திகாரர், ''சாவவுங் கெடவும் பாடவல்லவரும், முக்காலமு முணர்ந்தவருமாகிய இருடி'' என்று கூறுகிறார்'. நம் பொய்கையாழ்வாரும் ஓர் சிறந்த யோகி.

பேராசிரியர் நச்சினார்க்கினியர், தொல்காப்பிய உரையுள் விருந்துஎன்ற நூற்பகுப்புக்கு, ''பொய்கையார் முதலாயினர் செய்த அந்தாதிச்செய்யுள்''களை உதாரணங்களாகக் காட்டுகின்றனர். எனவே பூதத்தார், பேயார் திருவந்தாதிகளும் தழுவப்பட்ட செய்தி விளங்கும்'

சிலர் பொய்கையார், ''நாக்கொண்டு மானிடம் பாடாத'' குடியில் வந்தவரெனவே, கோச்செங்கணனைப்

பற்றி களவழி பாடியிருக்கமுடியாது என்று கருதுகின்றனர்.

" நயவேன் பிறர்பொருளை, நள்ளேன் கீழாரோடு
உயவேன் உயர்ந்தவரோடு அல்லால்:வியவேன்
திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்
வரும் ஆறு என்—என்மேல் வினை?"

[நயவேன் = விரும்பேன், நள்ளேன் = சேரேன்; உயவேன் = உசாவேன்.]

உயர்ந்தவரோடு அல்லால் பேசமாட்டேன் என்று சொன்னமையின், இவரால் ஓர் அரசன் போற்றப்பட்டானாயின், அவன் பெருமையும் பேசும் தரமோ? சுயகாரியம் ஒழித்து, பரகாரியத்திலும் தன் நாட்டு அரசனைச் சிறைமீட்பதற்கு, சிறந்த பண்பாடு கொண்ட ஓர் அரசனின் போர்த்திறனை வியந்து, பாடிய பாட்டுக்களை மானிடம் பாடியதாய் எண்ணவும் படுமோ? இதே சேரமான் கணைக்கால் இரும்பொறை திருப்போர்ப்புரத்துப் பொருத காலை, பொய்கையார் சென்றுரோ? புலவரின் பெருந்தன்மையை நோக்குக! அவர் சேரநாட்டையே துறந்து, தொண்டை நாடு அடைந்திருக்கவேண்டும். பொய்கையாரால் பாடப்பட்ட சிறந்த அரசன் திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்று வைணவனுகவே கருதப்படுகிருன்..

" இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"

(பெரிய திருமொழி 6ம் பத்து, 6ம் பதிகம், 8வது செய்யுள்)

என்றும்

" வெம்கண் மாகளிறுஉந்தி, வெண்ணி ஏற்ற
விறல் மன்னர்திறல் அழிய, வெம்மா உய்த்த
செங்கணுன் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே "

(பெரிய திருமொழி 6ம்பத்து, 6ம் பதிபகம்,4வது செய்யுள்)

என்றும் திருமங்கை மன்னன் பாடிய பாக்கள் அச்சோழனை பரமவைணவனுகவும், சமரஸ ஞானம் படைத்தவனுகவும் எடுத்துக்காட்டுகிறது. ஆகவே இத்தகைய பக்தனைப் புகழ்ந்த பாக்களை வைத்து, பொய்கையாரை மானிடம் பாடியதாக மதிக்கலாமோ? பக்தர்கள் சிந்திக்க!

பொய்கையாழ்வார் யோகியானமையின் நீண்ட காலம் இருந்திருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம். முதல் திருவந்தாதியில் பொய்கையாழ்வார்,

"பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி
அழுதேன் அரவணை மேல்கண்டு தொழுதேன்
கடல் ஓதம் கால் அலைப்பக் கண்வளரும் செங்கண்
அடல் ஓத வண்ணர் அடி"

என்று பாடினமையின் இவர் தம் ஆயுளின் முற்பகுதியில் பகவானைப்பற்றி நினையாமல் உலக விவகாரங்களில் ஈடுபட்டிருந்தார் எனலாம். ஆகவே வயதான பின் யோகியாகி யாக்கை நிலையாமையை உணர்ந்து பகவானைப்பற்றி,

" அரியபுலன் ஐந்து அடக்கி ஆய்மலர் கொண்டு ஆர்வம்
புரிய பரிசினுல் புல்கில், பெரியனுய்
மாற்ருது வீற்றிருந்த மாவலிபால் வண்கை நீர்
ஏற்ருனைக் காண்பது எளிது "

[புரிய=மிக; பரிசினுல்=அழகினுல்; புல்கில்=தொழுதால்]

என்று கண்டிருக்கவேண்டும்.

ஆகவே இவர் திருமால் சார்பாக நூறு பாட்டுக்கள் மட்டுமே பாடியிருக்கிருர். இவர் ஏறக்குறைய நூறு ஆண்டுகள் வாழ்ந்து இருக்கவேண்டும் யோகி ஸ்ரீமந் நாதமுனிகளைப்போல. எனவே கி. பி. 525ல் பிறந்தவரெனின் கி. பி. 625வரை வாழ்ந்திருக்க வேண்டும்.

கி. பி. 620ல் நம்மாழ்வாரை ஆழ்வார்கள் பெரும் குழு திருக்குருகூரில் கண்டிருக்க முடியும். திவ்ய சூரி சரிதம் கூறும் வாக்கும், உண்மையென விளங்கும்.

காலம் சென்ற திரு S வையாபுரிப் பிள்ளையின் கடைச்சங்ககாலக் கொள்கையைநோக்குக, பொய்கை யார் ஆருவது நூற்ருண்டினர் என்பது நம் கொள்கை யாதலின்:

இந்த முதலாழ்வார்கள் முதலியோர் திருக்குருகூரில் நம்மாழ்வாரையும், மற்றைய இடையாழ்வார்களையும் சந்தித்ததையும், நம் குலசேகரர் கி. பி. 586ல் அவதரித்ததையும் கண்டோம். குருபரம்பரைகள் குலசேகரர் அறுபத்து ஏழு ஆண்டுகள் திருமாலுக் கடிமை செய்ததாக கூறுதலின் அவர் கி. பி. 653ல் பரமபதித்திருக்கவேண்டும். இக்காலம், அவர் கால நிகழ்ச்சிகளுக்கு ஒத்துவருகின்றனவா என்று கவனிக்கவேண்டும்.

அவர் இளமையிலேயே அரசர்க்குரிய கலைகளைக் கற்று தேர்ந்தவரானுர் என்றும், உடன் பகை வெல்லலுற்று சோழ, பாண்டிய அரசர்களையும், கொங்கு நாட்டின் தலைவனையும் வென்று, "கொல்லிகாவலன், கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன்" என்றும் "கொங்கர்கோன்" என்றும் விருதுகளைப்பெற்று மீண்டார், என்றும் புராணப்பகுதி கூறும். ஆகவே குலசேகரன் தனது பதினெட்டாவது வயதில், அதாவது கி. பி. 604ல் சோழபாண்டிய அரசர்களையும், கொங்கு நாட்டின் தலைவனையும் வென்றிருக்கவேண்டும்.

பகை வென்று மீண்டபின், அவருடைய தகப்பன் இவருக்கு இராச்சிய பட்டாபிஷேகம் செய்துவிட்டு, தவம் செய்ய சென்றிருக்கவேண்டும். பிறகே இவர் திருமணம் செய்துகொண்டு, முதலில் இளை என்ற ஓர் பெண்ணையும், பிறகு இரண்டு வருடம் கழித்து, த்ருட

விரதன் என்ற ஓர் புத்திரனையும், அடைந்திருக்க வேண்டும். பன்னிரண்டு வருடங்கள் நேர்மையாக ஆட்சி செய்துவிட்டு, அரசாட்சியில் வெறுப்பு ஏற்பட்டு, தன் புத்திரனுக்குப் பத்து வயதிலேயே பட்டாபிஷேகம் செய்துவிட்டு, புத்திரி பக்தி மிகுந்தவளாயிருந்தமையின் அவளோடு கி. பி. 617ல் ஸ்ரீரங்கம் சென்று, அரங்கநாதனுக்கு அவளை மணவினைமுடித்து, இரண்டு வருடங்கள் அங்கு எழுந்தருளியிருந்து, திருச்சுத்து ஜீரணோத்தாரணம் செய்து, ஓர் மண்டபமும் கட்டிவிட்டு, அங்கிருந்து திவ்யதேசயாத்திரை செய்துகொண்டு ஆழ்வார்திருநகரிக்கு கி. பி. 620ல் எழுந்தருளி, ஆதிநாதன், நம்மாழ்வார் மற்றுமுள்ள ஆழ்வார்கள் எல்லோரையும் கண்டு அளவளாவிவிட்டு, வேதநாராயணபுரம் என்ற பிரும்மதேசத்திற்கு எழுந்தருளி இருந்ததாக ப்ரபந்நாமிர்தம் முதலிய குரு பரம்பரைகள் கூறுதலின், அவர் முப்பத்து மூன்று ஆண்டுகள் எழுந்தருளியிருந்து அர்ச்சையில் ஆவிர்ப்பவித்திருக்கவேண்டும்.

ஆகவே குலசேகராழ்வார் காலமும், நிகழ்ச்சிகளும், ஒத்துவருவது, அறிஞர்கள் நோக்குக்குரியது.

## (இ) தலைநகர் ஆராய்ச்சி.

சேர அரசர்களின் தலைநகர் வஞ்சி என்பது எல்லோருக்கும் தெரிந்திருக்கும். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பழந்தமிழ் நூல்கள் கூறும் வஞ்சி, மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கும், மேலைக் கடலுக்குக்கிழக்கும், ஆன்பொருனை நதிக்கரையிலும், இருந்தது.

" வாழியரோ, வாழிவரு புனனீரான் பொருநை
சூழ்தரும் வஞ்சியார் கோமான் தன் தொல் குலமே"

(சிலப்பதிகாரம்—காதை 29—வாழ்த்து—2)

என்ற அடிகளின்படி ஆன்பொருனை நதியால் சூழப்பட்ட வஞ்சி நகர் என்பது தெரிய வரும்.

சேர அரசனாக இருந்த குலசேகராழ்வாரின் தலைநகர், திருவஞ்சிக்களம் என்று குரு பரம்பரைகள் கூறும்.

ஆயினும் பின் பழகிய ஜீயர் குரு பரம்பரை, "கொல்லி நகரென்கிற திருப்படை வீட்டிலே" அவதரித்ததாகச் சொல்லுகிறது. வஞ்சி நகருக்கு, கொல்லி என்று ஓர் மறு பெயர் உண்டு என்று தெரிகிறது. ('சேரன்வஞ்சி' திவான்பகதூர் டாக்டர் S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் M. A. P. H. D. LLD பக்கம்-146) ஆகவே குலசேகராழ்வார் தன்னைக் "கொல்லி காவலன்" என்றும் "கொல்லி நகர்க்கிறை" என்றும் கூறிக்கொண்டிருக்கவேண்டும்.

வஞ்சி யென்பது கொங்கு நாட்டுக்கரூர் அன்று' கொங்கு நாட்டுக் கருராயிருப்பின், சேர. சோழ பாண்டியநாடுகளாய மூன்று பெரு நாடுகளுக்குத் தலைமை தாங்கியதைச் சொல்லும்பொழுது, "கொங்கு காவலன் கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன் என்றல்லவோ கூறியிருக்கவேண்டும்; அவ்வாறன்றி, "கொல்லி காவலன், கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன்" என்று கூறியிருப்பதிலிருந்தும், "கொல்லி நகர்க்கிறை" என்று தன்னைக் கூறிக்கொள்வதிலிருந்தும், "கொல்லி" என்பது சேரனின் தலைநகர் என்பது தெளிவு. ஆகவே சேரன் வஞ்சிக்குத்தான், 'கொல்லி' என்பது மறு பெயர் என்று நன்கு புலனாகிறது.

குலசேகரர் தன்னை "கொங்கர்கோன்" என்று கூறிக்கொள்வதிலிருந்து, கொங்கு தனி நாடாக இருந்ததென்பதும், அதையும் குலசேகரர் வென்றார் என்பதும், வெளியாகிறது.

மேலும் செங்கணான்கோச்சோழன், கொங்கு நாட்டை வென்றதைப்பற்றி திருமங்கையாழ்வார் சொல்லும்பொழுது,

> **"தென்னாடன், குடகொங்கன், சோழன் சேர்ந்த**
> **திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"**

(பெரியதிருமொழி—6ம்பத்து—6ம்பதிகம் 6வது செய்யுள்)

என்றார்.

எனவே கொங்கு தனி நாடாக இருந்ததென்பதும் செங்கணுன் கோச்சோழன் மேற்கே உள்ள கொங்கு நாட்டுக்கும் அரசனுயிருந்தான் என்பதும் வெளிப்படை. ஆகவே செங்கணுனுக்குப்பின் இருந்த சோழன் காலத்தில், குலசேகரர் கொங்கு நாட்டை வென்றிருக்க வேண்டும்.

சிலர்,

'பரனே, பஞ்சவன், பூழியன், சோழன்
பார்மன்னர், மன்னர் தாம்பணிந்தேத்தும், வரனே''
(பெரிய திருமொழி - 7பத்து- 7ம் பதிகம் - 4 வது செய்யுள்)

என்ற அடியில், திருமங்கையாழ்வார் பூழியன் என்ற சொல், பூழி நாட்டில் அரசாண்ட சேரனைக் குறிக்கும் என்பர். குலசேகரர் கோழிக்கோடு என்ற தலை நகரிலே அவதரித்தார் என்று திவ்ய சூரி சரிதம் கூறுதலினுலும், அது பூழி நாட்டின் தலை நகரமானதாலும் அவர்களுக்கு சந்தேகம் எழலாம். ஆயினும் குலசேகரர் வாக்கில் பூழி நாட்டைப் பற்றியோ, கோழிக்கோடைப் பற்றியோ ஒரு குறிப்பும் இல்லை. ஆகவே திருமங்கையாழ்வார் வாக்குக்கு இங்கு, பாண்டிய, சேர, சோழன் என்றுதான் பொருளே தவிர, வேறு பூழியன் என்பதற்கு பொருள் கற்பிக்கவும் முடியாது, கூடவும் கூடாது. திவ்ய சூரி சரித ஆசிரியர் காலத்தில் கோழிக்கோடு சேர நாட்டின் தலைநகர்; எனவே குலசேகரர் கோழிக்கோடு என்ற தலை நகரில் அவதரித்ததாகக் கூறுகிறுர். உண்மையில் குட்ட நாட்டு வஞ்சிதான் தலைநகர்.

சேர நாட்டு வஞ்சிக்கு, கரூர் என்று மறு பெயர் உண்டு. (''சேரன்வஞ்சி'' திவான் பகதூர் டாக்டர் S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், பக்கம் 62) கொங்கு நாட்டுக் கரூர் சேரர் வசமே பல காலம் இருந்து வந்தது. ஆகவே அவர்களுக்கு இது ஒரு இடை நாடாக (Buffer State) இருந்து வந்தது. குட்ட நாட்டு வஞ்சிதான் சேரன் வஞ்சி, சிலப்பதிகாரம் கூறும் வஞ்சியும் ஆகும். கண்ணகி

வைகையாற்றின் தென்கரை வழியாகச் சென்றபடி நாமும் போவோமேயாயின் குணவாயிற் கோட்டத்தை அடையலாம். இவற்றிலிருந்து சேரநாட்டு வஞ்சிதான் திருவஞ்சிக்களம் என்பது நன்கு விளங்கும். அதுவே தலை நகரும் ஆகும்.

## (உ) வித்துவக்கோடு ஆராய்ச்சி.

வித்துவக்கோடு என்னும் ஓர் தலத்தைக் குலசேகராழ்வார் பாடி இருக்கிறார் இத்தலம் திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளுள், மலை நாட்டுத் திருப்பதியைச் சேர்ந்ததாக, ஆசாரியர்கள் வகுத்திருக்கின்றனர். ஆயினும் அறிஞர்கள் பலர் இத்திருப்பதி மலை நாட்டில் உள்ளது அன்று, என்று அபிப்பிராயப்படுகிறார்கள். (''ஆழ்வார்கள் கால நிலை'' மு. இராகவய்யங்கார் - பக்கம் 169—வரி 30) ஆனால் கொங்குக் கரூரிலுள்ள திருமால் கோட்டத்தைச் சுற்றியுள்ள பகுதிக்கு வித்துவக்கோட்டக்கிரகாரம் என்று பெயர் உள்ளமையால் அதுவே வித்துவக்கோடாக இருக்கவேண்டும் என்று மு. இராகவய்யங்கார் ஸ்வாமி கருதுகின்றார்கள்.

கொங்கு நாட்டை நம் குலசேகரர், கோழியை (உறையூர்)ப்போல் அடிபணிய வைத்தாரே தவிர, அங்கு அரசாட்சி செய்தவரல்லர். வித்துவான்கள் வாழும் இடமாக இருந்ததுபற்றி, ஒருக்கால் மேற்கூறிய கரூர்ப்பகுதி வித்துவக்கோடு என்று பெயர் பெற்றிருக்கலாம். ஆனால் அது குலசேகரர் பாடிய வித்துவக்கோடாக இருக்கவேண்டுமென்ற நியதியில்லை.

இனி வித்துவக்கோடு என்ற தொடருக்குப்பொருளை கவனிப்போம். இதற்கு ''வித்துவான்கள் வாழும் நீர்க்கரை'' என்பது பொருளாகும். (கோடு = நீர்க்கரை) இந்தக் 'கோடு' என்ற வார்த்தை ஓர் பழைய சொல். இச்சொல் சேரநாட்டினரிடத்தே வழங்கிய அருஞ்சொல் சேரநாடு, மலைவளத்தோடு, மழைவளமும் உடைய. நாடாகையாலும், எங்கும் நீர் நிலைகள் உள்ள ஓர் செழிப்

பான பிரதேசமாகையாலும், இவர்கள் தங்கள் நாட்டிலே உள்ள மிகச் செழிப்பான ஊருக்குப் பின் 'கோடு' என்று ஊர்ப்பெயரோடு கூட்டி, பெயர் வழங்கி வந்ததில் ஆச்சரியமில்லை, திரு அதங்கோடு, கொல்லங்கோடு, அழிக்கோடு, முயிரிக்கோடு, திருச்செங்கோடு, கோழிக்கோடு முதலியன இங்ஙனம் பெயர் பெற்றவையே.

இச்சொல் திருவள்ளுவரால்

"அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர் நிறைந் தற்று"

என்ற குறளில் கையாளப்பட்டிருக்கிறது. "சுற்றத்தோடு நெஞ்சுகலத்தலில்லாதான் வாழ்க்கை குளப்பரப்புக் கரையின்றி நீர் நிறைந்தாற்போலும்" என்பது இதன் பொருள். ('ஆழ்வார்கள் காலநிலை' மு. இராகவய்யங்கார் பக்கம் 168) மேலும் கோடு என்ற சொல்லுக்கு மலை என்று ஒரு பொருள். இவ்வூர் தென் பாண்டி நாட்டு மலை மண்டலத்தில் இருப்பதால் இப்பெயர் பெற்றும் இருக்கலாம்.

ஆகவே கோடு என்ற இந்தச் சொல்லை பிரும்ம வித்துவான்கள் நிறைந்த நீர் நிலைகளால் சூழப்பட்ட, மலைக்கருகாமையிலுள்ள ஓர் ஊருடன் சேர்த்து வித்துவக்கோடு என்று வழங்கப்பட்டிருக்கலாம். தமது ஊரிலே ஒரு புறம் பெரியாறு என்ற ஆன் பொருனையும் மறுபுறம் சிற்றாறு என்ற ஆன்பொருனையிலேயே சேரும் ஓர் ஆறும் ஓடுவது போன்று, ஒரு புறம் தண் பொருனையும், மறுபுறம் கருணையாறு என்ற தண்பொருனையிலே கலக்கும் ஆறும் ஓடும் பிரதேசத்தைக் கண்ணுற்று, தன் மனதிற்கு உவப்பான, பிரம்ம வித்துவான்களால் வழிபடப்பட்ட கோயில் ஒன்று இருந்தால், அந்த இடத்தைக் குலசேகரர் காமுறல் இயற்கையேயன்றோ! மேலும் அவ்வாறுகள்,

" முதிர்பூம் பரப்பி ஞெழுகு புனலொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் பாட
நெடியோன் மார்பி லாரம் போன்று"

ஓர் பக்தனுக்குத் தோன்றின் அப்பிரதேசத்தை அப் பக்தன், திருவித்துவக்கோடு என்று அழையாமல், வேறு எவ்வாறு அழைத்திருக்கமுடியும்? அன்றியும் வடமொழி வாணர், அந்தணர் வாழ்ந்த இடத்தை பிரும்மதேசம் என்று அழைக்கும் பொழுது, ஓர் மலைநாட்டுத் தமிழன் திருவித்துவக்கோடு என்று தானே அதை விளித்திருக்க முடியும்? அவ்வாறே கூறியவர்தான் நம் குலசேகரரும்.

இத்தகைய பெருமைகள் வாய்ந்த ஊர்தான் இன்றைய மன்னூர்கோவில். இந்த ஊரின் பெயர் அடைந்திருக்கும் மாறுதல்களை நோக்கின், யாரும் ஆச்சரியப்படத்தான் செய்வார்கள்.

ஆதியில் எல்லா சமயத்தார்களும் சேர்ந்து பெருமாள் பெயரை இட்டு ஊரை அழைக்க வேண்டுமென்று நினைத்தபொழுது, அவ்வூரை வேதநாராயணபுரம் அல்லது வேதபுரி என்றழைத்தனர்.

சங்க காலத்திலிருந்து, அந்த நாகரிகத்தோடு ஒட்டிய கோயில் என்றும், இங்கே அக்காலத்தில் பிரும்ம வித்துவான்கள் நிறைந்து இருந்தனர் என்றும், அவர்களுக்குப் பாண்டியனால் இவ்வூர் தானமாகக் கொடுக்கப் பட்டதென்றும், ஆகவே இதற்கு பிரும்மதேசம் என்ற காரணப் பெயர் ஏற்பட்டது என்றும், கண்டோம்.

இதுவும் இராஜ இராஜ சோழன் காலத்தில், தெற்கே உள்ள மலை மண்டலத்தை, இராஜ இராஜ பாண்டிநாடு என்றும், தண் பொருனை ஆற்றை, முடிகொண்ட சோழப் பேருரென்றும், கருணை ஆற்றை இராஜ இராஜப் பேருரென்றும்' இன்றைய அம்பாசமுத்திரத்தைச் சுற்றியுள்ள சில கிராமங்களைச் சேர்த்து இராஜ இராஜச் சதுர்வேதிமங்கலம் என்றும், வேதபுரியை, இராஜேந்திரசோழ விண்ணகர் என்றும், சோழ அரசர்கள் அழைத்துவந்தனர், (சிந்தனை: பழைய பட்டணம்: **R.** திருமலை, கலெக்டர், கன்னியாகுமரி மாவட்டம்)

பின்னர் குலசேகரருக்கு, இராஜகோபாலன் என்ற அழகிய மன்னனார், பேசும் தெய்வமாக இருந்தார் என்பதை உணர்ந்த மக்கள், அழகிய மன்னனாரைக்கொண்டாடவும், அக்கோயிலை மன்னனார்கோயில் என்று அழைக்கவும் தலைப்பட்டனர். கோயிலுக்கு ஆகிய பெயர் கோயிலுள்ள இடத்துக்கும் ஆகி, அப்பிரதேசம் மன்னனார்கோவில் என ஆய்விட்டது. பிற்காலத்தில் மன்னனார்கோவில் இடை குறைந்து மன்னார்கோவிலாகவே மாறிவிட்டது, என்று ஒரு சாரார் கூறுகின்றனர்.

அடியேனுடைய கருத்து. குலசேகர மன்னன் எழுந்தருளியதற்குப் பின் மக்கள் குலசேகர மன்னன் பெயரை வைத்து மன்னனார்கோயில் என்று அழைத்திருக்க வேண்டும்; அதுவே பின்னால் மன்னார்கோயிலாக மாறி இருக்கவேண்டும் என்பது.

ஆகவே குலசேகராழ்வார் வைத்த திருவித்துவக்கோடு என்ற பெயர் வழக்கின்றி மறைந்தது. திவ்யப்ரபந்தமே நம்மாழ்வாரிடமிருந்து, ஸ்ரீமந் நாதமுனிகளால் கேட்டுத்தெரிந்துகொள்ளவேண்டிய நிலை இருந்தது என்றால் ஒரு திருப்பதியின் பெயர் வழக்கொழிந்ததற்கு காரணம், காலமும், அவ்வூர் மக்களுமே என்றுதான் கூற வேண்டியிருக்கிறது.

மலை நாட்டுத் திருப்பதிகள் ஒன்றுவிடாமல் பாடிய நம்மாழ்வார், இத்திருப்பதி மலைநாட்டில் இருந்தால் நிச்சயமாகப் பாடியிருப்பார். இவரும் மலைநாட்டுத் திருப்பதிகளில் வேறொரு திருப்பதியையும் பாடாது, இதை மட்டும் பாடவேண்டிய அவசியமில்லை. மேலும் குலசேகரர், ஊருக்குப் பக்கத்திலேயே திருப்பதிகள் பல இருக்க ஐம்பது மைலுக்கு அப்பாலுள்ள ஓர் திருப்பதியை, இவர் பாடியிருப்பார் என்று சொல்லுவதும், அறிஞர் ஒப்புக்கொள்ளக்கூடியதாக இல்லை.

ஆனால் குலசேகரர், வேதநாராயணபுரமாகிய இத் திருப்பதியில் வந்து தன் ஆயுட் காலத்தில் பாதியைக் கழித்திருப்பதிலிருந்து (பிரபந்நாமிர்தம்) இந்த எம் பெருமானிடத்தில் அவர் ஈடுபட்ட தன்மையை அறிய லாம். மேலும் அரசராயிருந்தமையின் இங்குள்ள பிரும்ம வித்துவான்கள் தங்களுடைய சாத்திர ஞானத்தால் இவரை மதியாது தருக்கி இருந்தனர் என்ற கர்ண பரம் பரைச்செய்தி நோக்கத்தக்கது. ஆகவேதான் இவர், "மீளாத்துயர் தரினும் வித்துவக்கோட்டம்மா" என்றும் "வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா" என்றும் "மெய்த்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட் டம்மா" என்று பெருமானையே பிரார்த்தித்து அலறி இருக்கவேண்டும். ஆனாலும் இவர் அந்த ஊரில் உறுதி யோடு இருந்தார் என்பதையே காண்பிக்கிறது, "வித்து வக்கோட்டம்மா நீ வேண்டாயேயாயிடினும்' மற்றாரும் பற்றிலேன் என்று அவனைத்தாள் நயந்து" என்ற அவரடிகள்.

"எங்கும்போய் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே"

என்ற இவர் பாசுர அடிகளைப் படிக்கும் பொழுது கம்பனின்

"மருங்கிலா நங்கைக்கும் வசையில் ஐயற்கும்
ஒருங்குறும் இரண்(டு)உடற் குயிர் ஒன்(று)ஆய்தே
கருங்கடல் பள்ளியில்க் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?"

என்ற அடிகள் நினைவிற்கு வரும். இவர் கௌஸ்துபாம் சராய் பகவானிடத்தில், பாற்கடலில் இருந்து பிரிந்து. இந்த உடலை எடுத்து, உழன்று, மறுபடியும் வேதநாரா யணனிடத்தில் பள்ளிகொண்ட திருக்கோலத்திலேயே, அவனை அடைய விரும்பியதை இதிற் குறிக்கிறார். ஏனெனில், தாம் இப்பெருமானைவிட்டு இனி பிரியப்போவ தில்லை என்ற உறுதிகொண்டு, இவ்வூரிலேயே எழுந்தருளி

யமையால், என்பது அறிஞர் நோக்கத்தக்கது. இன்னும் குலசேகராழ்வார் உயிரோடிருப்பதாகவே எண்ணப்படுகிறது.

மற்றும் திருமால் திருப்பதிகள் - பாடல் பெற்ற ஸ்தலம் - நூற்றெட்டு என்பது எல்லோருக்கும் தெரியும். அதிலும் பாண்டியநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு என்று திருப்பதிகளை வகுத்த ஆசாரியர்கள் கூறுவர். மன்னார்கோவில் கல்வெட்டு ஒன்றில், ஜடாவர்மன் குலசேகரன் காலத்தில் கி. பி. 1190முதல் 1217வரை உள்ளதில், "அச்செண்டலங்கார தாஸர் விண்ணப்பம் செய்தடத்துப்பிள்ளையும் திருவுள்ளமாய், பதினெட்டு மண்டலத்து ஸ்ரீ வைஷ்ணவரையும் எங்களையும் அமைத்தருளி, நம் குலசேகரனுக்கு அடுக்களைப்புறமாக்க, கடமையந்தராயமு, மற்றுமுமெப் பெயரப்பட்டதுவுங் குடுத்தோம்" என்று வெட்டியிருக்கிறது. இவ்வாறே பாண்டியநாட்டு மற்றத் திருப்பதிகளிலும், பதினெட்டு மண்டலத்து ஸ்ரீ வைஷ்ணவர்களும் .இங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களும் என்று அருளிப்பாடு ஆவதால் பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டும் ஒன்றும் பத்தொன்பது என்பது வெளிப்படும். ஆகவே குலசேகரர் பாடிய திருவித்துவக் கோடாகிய மன்னார்கோவிலைப் பாண்டிய நாட்டுத் திருப்பதிகளில் சேர்க்கவேண்டியதின் அவசியத்தைப் பற்றி இப்பொழுது நீங்கள் சொல்லுங்கள்!

ஓம் தத் ஸத்.

